## த்3வயோபஷ்டம்ப4கப்ரமாண நிரூபணம்

a மேம்பொருளிலே விஶத3மாகிற இரண்டர்த்த2த்தை b 'புலனைந்து மேயும்' என்று உபதே3ஶிக்கக் கேட்டவர்கள் அநுஷ்டா2நரூபமான திருப்பாவையிலும். cதாயே தந்தையிலும் ஸ்தோத்ர க3த்3யங்களிலும் த்3வயத்திலடைவு காணலாம்.

## த்3வயத்தினுடைய வைதி3க பரிக்3ரஹம்

திருமந்த்ரத்தை ஶாஸ்த்ரங்களங்கீ2கரித்தது: சரம ஶ்லோகத்தை ஶாஸ்த்ரங்களுக்குள்ளீடானவன் ஆத3ரித்தான்: த்3வயத்தை அவன் தனக்கும் உள்ளீடான ஜ்ஞாநிகள் பரிக்3ரஹித்தார்கள். ப்ரமாண ப்ரமேயங்களினுடைய அங்கீ2காரங்கள் போலன்றிறே. ப்ராமாணிகரான ப்ரமாதாக்களுடைய பரிக்3ரஹம்.

---

த்3வயார்த்த2 ப்ரதிபாத3க ப்ரமாணங்களைக் காட்டியருளுகிறார் (மேம்பொருள்) என்று தொடங்கி.

ரஹஸ்யத்ரயத்திலும் வைத்துக்கொண்டு ரஹஸ்ய த்3வயாபேக்ஷயா த்3வயத்துக்குண்டான வைலக்ஷண்யத்தை அருளிச்செய்கிறார் (திருமந்த்ரத்தை) என்று தொடங்கி. இத்தால் ரஹஸ்யத்ரயத்துக்குண்டான வேத3வேத்3ய வைதி3க பரிக்3ரஹம் நிரூபிதமாயிற்று. 'வேதை3ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்3ய:' என்கிற கீ3தா வசநத்தையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (ஶாஸ்த்ரங்களுக்குள்ளீடானவன்) என்று. "ஜ்ஞாநீ த்வாத்மைவ"(கீ3தை)"அறிவாருயிர்" (திருவாய்மொழி 6-9-5) என்றத்தையுட்கொண்டருளிச்செய்கிறார் (அவன் தனக்கும்) இத்யாதி. வைதி3கபரிக்3ரஹத்துக்குண்டான ஏற்றத்தை அருளிச்செய்கிறார்(ப்ரமாண) இத்யாதி3. "இவர் அங்கீ3காரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்" (ஆசார்யஹ்ருத3யம் 194) என்னாநின்றதிறே. பு3த்3த4முநியாயும், கபிலமுநியாயும் சொன்ன பௌ3த்3த4 ஶாஸ்த்ரமும் ஸாங்க்2ய ஶாஸ்த்ரமும் அவன் தா

a திருமாலை 38 b திருவாய் 2-8-4 c பெரியதிரு 1-

ef



## த்3வயத்தின் பரமகு3ஹ்யத்வம்

பூர்வாசார்யர்கள் இரண்டு ரஹஸ்யத்திலும் அர்த்த2த்தை மறைத்து ஶப்3த3த்தை வெளியிடுவார்கள். இதிலர்த்த2த்தைப் போலவே ஶப்3த3த்தையும் மறைப்பர்கள். இப்படிச் செய்கைக்கடி இது அதி4க்ருதாதி4காரமாகையிறே.

## த்3வய வைப4வம்

a வளங்கொள் மந்திரமும் b மெய்ம்மைப் பெருவார்த்தையும் அருளிச்செய்த வாயாலே 'த்3வய வக்தா' 'த்3வய மர்த்தா2நுஸந்தா4நேந' என்று இரண்டினேற்றமும் வெளியிடப்பட்டதிறே. கற்றவர்கள் சொல்லக்கேட்டாலும் கற்பித்தவர்கள் c கைகூப்பிக் காலிலே வணங்கும்படியிறே இச்சொல்லிலேற்றம். d செல்வநாரணனென்ற சொல் வழிப்போக்கர்

---

அருளிச்செய்ததாயிருக்கச்செய்தே வைதி3க பரிக்3ரஹமில்லாமையிறே அப்ரமாணமாய்த்து என்றபடி.

த்3வயத்துக்குண்டான கு3ஹ்யாநாம் கு3ஹ்யதமத்வத்தை உபபாதி3க்கிறார் (பூர்வாசார்ய) என்று தொடங்கி. அதி4க்ருதாதி4காரம் என்றது பரமகு3ஹ்யம் என்றபடி.

திருவரங்கச் செல்வனார் விஷயகமான a "துளங்குநீள் முடி" b "செம்மையுடைய" என்கிற பாசுரங்களைத் திருவுள்ளத்தே கொண்டருளிச்செய்கிறார் (வளங்கொள்) இத்யாதி3. ஶரணாக3திக3த்3ய ப்ரமேயமான ஸ்ரீரங்க3பதியதிபதி ஸம்வாத3த்திலே ஸ்ரீரங்க3பதி வாக்யத்தை அருளிச்செய்கிறார் (த்3வயவக்தா) என்று தொடங்கி. வசநத்3வயோபாதா3நம் ஶப்3தா3ர்த்த2யோ: வைப4வ ப்ரகாஶநாய என்று கண்டுகொள்வது. c "முனைக்கதிரை" என்கிற பாட்டைத் திருவுள்ளத்தே கொண்டருளிச்செய்கிறார் (கற்றவர்கள்) இத்யாதி3. கற்றவர்—கிளி. கற்பித்தவர்—பரகாலநாயிகை. (செல்வநாரணன்) இத்யாதி3—இப்பாசுர வ்யாக்2யாநமான

ef 17.5

aபெரியதிரு5-8-9 bநாச்-திரு11-10 cதிருநெடு14 dதிருவாய்1-10-8

சொல்லிலும் அகலாதே உள்ளே புகுரும்படி பண்ணுமதாய், a 'எங்கும் திருவருள்பெற்று' என்னும்படி தோற்கன்றுக் கிரங்கிச் சுரக்கும் ஸுரபி4யைப்போலே, நம்மைப் பாராதே முன்பு சொன்னவர்களைப் பார்த்து இரங்கும்படி அவன்றன்னை யும் பண்ணுமதிறே. நம் முதலிகள் மூன்று ரஹஸ்யத்தை யும் தங்களுக்குத் தஞ்சமாக நினைத்திருக்கச் செய்தேயும் b 'ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்' என் றிருக்கிற தம்மோடொக்க விமுக2ரையும் c 'திருநாரணன்தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ' என்னலாம்படி ஸர்வாதி4கார மாகையாலும் d 'உம்மை யான் கற்பியாவைத்த மாற்றம்' என்னும்படி ஆசார்யருசி பரிக்3ருஹீதமாகையாலும் e 'மாதவ னென்றென்றோதவல்லீரேல்' என்னும்படி பு3த்3தி4பூர்வகமான அபசாரத்துக்கும் பரிஹாரமாகையாலும் f 'மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்' என்னும்படி ஶரீராவஸாநகாலத்

---

சட்டில் உள்ள வழிப்போக்கன் சரித்ரம் இங்கே அநு ஸந்தே4யம். "நற்கன்றுக்கு இரங்கும் தே4நு தோற் கன்றுக்கும் இரங்குமாபோலே" என்ற பட்டர் திருவாக்கை யடியொற்றி (தோற்கன்று) இத்யாதி3. வங்கக்கடல் பாட்டில் உள்ள "மாதவன்" "திருமால்" என்ற பத3ங்களிலே நோக்கு என்று கண்டுகொள்வது. "மெய்க்கன்றுக்கு இரங்கிப் போந்த வாஸனையாலே தோற்கன்றை மடுத்தாலும் ஸுரபி4யானது இரங்கிப் பால் சுரக்குமாபோலே, மெய் யானவர்களுக்கு இரங்கிப்போந்த வாஸனையாலே, பொய் யான நமக்குமிரங்குவது இஶப்3த3விஶேஷத்தை(ஸ்ரீமத் பத3ம்) கேட்டாலாய்த்து. ஆகையாலே இதுவே அநு ஸந்தே4யம்" என்று பிள்ளைக்கு ஜீயர் அருளிச்செய்த வார்த்தை; ஆகையாலே த்3வயமே ஆத3ரணீயம் என்ற தாய்த்து. த்3வயத்துக்குண்டான ஸர்வாதி4காரத்வாதி3 வைப4வங்களை அருளிச்செய்கிறார் (நம் முதலிகள்) என்று

---

a திருப்பாவை 30 b திருவாய் 5-7-10 c திருவாய் 4-1-1
d திருவாய் 6-8-6 e திருவாய் 10-5-7 f திருவாய் 9-10-5



திலே மோக்ஷமாகையாலும், த்3வயத்தையே தஞ்சமாக நினைப்பார்கள். ஸம்வாத3ங்களும் வ்யாக்2யாநங்களும் ஆசார்ய

---

தொடங்கி. (பு3த்3தி4பூர்வகமான) இதி—தீது—பு3த்3தி4பூர்வக பூர்வபாபம் என்றபடி. (ஸம்வாத3ங்களும்) இத்யாதி3—ஆசார் யன் ப்ரமாதாவென்றும், அர்ச்சாவதாரம் ப்ரமேயமென்றும், த்3வயம் ப்ரமாணமென்றும் அருளிச்செய்வர் உய்யக் கொண்டார். "ஸம்ஸாரவிஷத3ஷ்டனுக்கு த்3வயம் ரஸா யநஸேவையாயிருக்கும்" என்று மணக்கால்நம்பி அருளிச் செய்வர். "அத4நனுக்கு மஹாநிதி4போலே" என்று பெரியமுதலியார் அருளிச்செய்வர். "க்ஷுத்4ரார்த்தனுக்கு அம்ருதபாநம்போலே" என்றருளிச்செய்வர் திருமாலை யாண்டான். "ஸ்தநந்த4ய ப்ரஜைக்கு ஸ்தந்யம்போலே யிருக்கும்" என்றருளிச்செய்வர் திருக்கோட்டியூர்நம்பி. "ராஜகுமாரனுக்கு முடியும் மாலையும்போலே ப்ரபந்ந குலத்துக்கு த்3வயோச்சாரணம்" என்றருளிச்செய்வர் பா4ஷ்யகாரர். "ஸம்ஸாரத்திலே இருவிலங்கிட்டவன் தலை யிலே முடியை வைத்தாப்போலே" என்று எம்பார் அருளிச் செய்வர். "பெருமிடியன் கையில் சிந்தாமணி புகுந்தாப் போலே"யென்று பிள்ளையுறங்காவில்லிதா3ஸர். "எலுமிச்சம் பழம் கொடுத்து ராஜ்யம் பெறுவாரைப்போலே" என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான். பட்டர்-ஜீயர் மடியிலே கண்வளர, இராமுடியத் துடைமாறுதல் தூங்குதல் செய் யாதே ஸாவதா4நராயிருக்க, ஜீயரைப் பார்த்து, "இப்படி நீர் எனக்குப் பரிவராய் இருக்கைக்கடி, நான் சொன்ன த்3வயத்தை விஶ்வஸித்த கனமிறே" என்றருளிச்செய்தார். "வாச்யங்களில் எம்பெருமானுக்கவ்வருகில்லாதாப்போலே வாசகங்களில் ப்ரபத்தி(த்3வயம்)யிற்காட்டில் அவ்வருகில்லை" என்றருளிச்செய்வர் நஞ்ஜீயர். "ராஜகுமாரனுக்கு கர்ப்பூர நிகரம்போலே இவனுக்குவிடில் நாக்குவற்றும்" என்று நம்பிள்ளையருளிச்செய்வர். பெற்றி ஸ்ரீபாத3த்திலே த்3வய ஶ்ரவணம் பண்ணின கொற்றியம்மைப் பிராட்டியாரும் திருமந்த்ரத்தை அருளிச்செய்யவேணுமென்ன. "அது

வசநங்களும் ருசிவிஶ்வாஸங்களுக்குறுப்பாக இவ்விடத்திலே அநுஸந்தி4க்கப்படும்.

---

த்3வயத்துக்குள்ளேயுண்டு காணும். அதுகொண்டு சொன்னும் கார்யத்தையும் த்3வயத்தைக்கொண்டு கொள்ளும்" என்றருளிச்செய்தார். பெரியகோயில் நாராயணன் மகன் ஏகாயநரோடேயிருக்கக்கண்டு, பா4ஷ்யகாரர் அவனை யழைத்து, பெருமாள் திருமுன்பேகொண்டுபுக்கு, "த்3வய மொழியத் தஞ்சமில்லை. அத்தை விஶ்வஸித்திரும்" என்று ஸ்ரீஶடகோபனையெடுத்துச் சூழ்த்துக்கொடுத்தார். ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளப் புறவீடு விட்டிருக்கிற த3ஶையிலே, "ஆழ்வானுக்குக் கர்ப்பூரநிகரத்தை வாயிலிட்டாப்போலே காணுங்கோள்" என்று அவருக்கு த்3வயத்தை அருளிச்செய்தார். அநந்தாழ்வான் நஞ்ஜீயரைப்பார்த்து "திருமந்த்ரத்திலே பிறந்து த்3வயத்திலே வளர்ந்து த்3வயைக நிஷ்ட2ராவீர்" என்று வாழ்த்தினர். இங்ஙனே இவை முதலான வார்த்தைகள் இதினுடைய ருசி விஶ்வாஸங்களுக்காக இவ்விடத்திலே அநுஸந்தே4யங்கள் என்றபடி. ரகு4ராக்ஷஸஸம்வாத3ம், நஹுஷப்3ருஹஸ்பதி ஸம்வாத3ம், வ்யாக்4ரவாநரஸம்வாத3ம், மறவனை, "குரங்குக் குட்டியை விட்டுப்போந்தேன்" என்ன, அதுகேட்டு ப4ட்டர் அருளிச்செய்த வார்த்தையும், பா4ஷ்யகாரர் சரமஸமயத்திலே "த்3வயத்தையெப்போதும் அநுஸந்தி4க்கை எனக்கு ப்ரியம்" என்றருளிச்செய்த வார்த்தையும், அம்மங்கியம்மாள் திருநாராயணபுரத்திலே காணச்செல்ல, உடையவர் அருளிச்செய்த வார்த்தையும் தொடக்கமான பூர்வாசார்ய வசனங்களும் இங்கே அநுஸந்தே4யங்கள். திருமந்த்ரத்திலும் சரமஶ்லோகத்திலும் அர்த்த2ஜ்ஞாநத்தாலும் து3ஸ்ஸாத்4யமான ப2லம் இதில் ஶப்3தோ3ச்சாரணத்தாலே ஸுலப4மா— "மாதவன் என்றதேகொண்டு என்னை இனி இப்பாற்பட்டது யாதவங்களும் சேர்கொண்டேன் என்று என்னுள் புகுந்திருந்து தீதவம் கெடுக்குமமுதம்" என்றும், "மாதவன்



## ஶாஸ்த்ர ஶாஸ்த்ர ஸார தாத்பர்ய நிரூபணம்

ஶாஸ்த்ரங்களும், சரமஶ்லோகமும் ஆத்மேஶ்வரர்களுடைய ஸ்வாதந்த்ர்யத்தைக் காட்டும். திருமந்த்ரமும் த்3வய

---

என்றென்று ஓதவல்லீரேல் தீதொன்றும் அடையா ஏதம் சாராவே" என்றுமிறே ஆழ்வார் அருளிச்செய்தது.

ஶாஸ்த்ர ஶாஸ்த்ர ஸார தாத்பர்யங்களையருளிச்செய்யும் முக2த்தாலே த்3வய வைப4வத்தையருளிச்செய்கிறார் ( ஶாஸ்த்ரங்களும் ) என்று தொடங்கி. திருமந்த்ரம் ஶாஸ்த்ர ருசிபரிக்3ருஹீதம். சரமஶ்லோகம் ஶரண்ய ருசி பரிக்3ருஹீதம். த்3வயம் ஆசார்ய ருசிபரிக்3ருஹீதம். இம்மூன்றுக்கும் மூன்றும் உண்டாயிருக்கச் செய்தேயும் இப்படிச் சொல்லுகிறது ஊற்றத்தைப்பற்ற. த்3வயம் கட2வல்லியிலே அதீ4தமாகையாலே ஶாஸ்த்ர ருசிபரிக்3ருஹீதம். ப்3ரஹ்மாதி3களைக் குறித்து ஸர்வேஶ்வரன் அருளிச்செய்தான் என்னுமிடம் ப4க3வச்சா2ஸ்த்ரஸித்3த4மாகையாலே ஶரண்யருசி பரிக்3ருஹீதம். ஆசார்யருசி பரிக்3ருஹீதமென்கைக்குக் கீழே ஆசார்யவசநங்கள் சொன்னோம். நிரர்த்த2கமான ஸமுத்3ரகோ4ஷத்தைக்காட்டில் ஸார்த்த2கங்களான க4டபடாதி3ஶப்3த3ங்கள் ஶ்ரேஷ்ட2ங்கள். அவற்றிற்காட்டில் தே3வதாந்தரநாமங்கள் ஶ்ரேஷ்ட2ங்கள். அவற்றிற்காட்டில் ப4க3வந்நாமங்கள் ஶ்ரேஷ்ட2ங்கள். அவற்றில் வைத்துக்கொண்டு மூலமந்த்ரம் ஶ்ரேஷ்ட2ம். மூலமந்த்ரம் ஸமுத்3ரகோ4ஷஸ்தா2நீயமாம்படி த்3வயம் ஶ்ரேஷ்ட2ம். அதுக்கடி மூலமந்த்ரத்தில் ஆர்த்த2மான அர்த்த2ம் த்3வயத்திலே வாச்யமாகை. வாச்யங்களில் ஸர்வேஶ்வரனுக்கு அவ்வருகில்லாதாப்போலே வாசகங்களிலும் இதுக்கவ்வருகில்லை. இதுவே ஸித்3தா4ந்தம். திருமந்த்ரம் ஆத்மபாரதந்த்ர்ய ப்ரதா4நம். சரமஶ்லோகம் ப்ராபகப்ரதா4நம். த்3வயம் உப4யப்ரதா4நம். திருமந்த்ரம் மந்த்ரரூபம். சரமஶ்லோகம் விதி4ரூபம். த்3வயம் அநுஷ்டா2நரூபம்—என்றபடி. ( ஆத்மேஶ்வரர்களுடைய ) இத்

மும் ஆத்மபரமாத்ம பாரதந்த்ர்யத்தை வெளியிடும். ஶாஸ்த்ரங்களுக்கு ஆத்மாவினுடைய தே3ஹபாரதந்த்ர்யத்திலே நோக்கு. திருமந்த்ரத்துக்கு ஆத்மாவினுடைய தே3ஹிபாரதந்த்ர்ய ரத்... பாரதந்த்ர்யத்திலே உறைப்பு. சரமஶ்லோகத்துக்குக் கர்ம... களினுடைய ஈஶ்வர பாரதந்த்ர்யத்திலே நினைவு த்3வயத்துக்கு ஈஶ்வரனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்திலே கருத்து.

### வாக்யார்த்த2 நிரூபணம்

இதில் முற்கூறு—மறுக்கவொண்ணாத புருஷகாரத்தை முன்னிட்டு எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றும்படியை அறிவிக்கிறது. பிற்கூறு சேர்வாரோட்டைச் சேர்த்தியிலே அவனுக்குச் செய்யும் அடிமையில் இரப்பை வெளியிடுகிறது.

அவதாரிகை ஸமாப்தை.

---

*யாதி3— ஶாஸ்த்ரங்களுக்கு ஆத்மஸ்வாதந்த்ர்யத்திலேயும் திருமந்த்ரத்துக்கு ஆத்மபாரதந்த்ர்யத்திலேயும் நோக்காக அருளிச்செய்தது. ஆத்மாவினுடைய ஜ்ஞாத்ருத்வ ஶேஷத்வங்கள் ஶாஸ்த்ர ஶாஸ்த்ர ஸார விஷயங்கள் என்றதைப் பற்ற என்று கண்டுகொள்வது. ஈஶ்வரனுடைய ஆஶ்ரித பாரதந்த்ர்யமாவது— "மணநோக்கமுண்டான்" "அல்லி மலர் மகள் போக மயக்குக்களாகியும் நிற்குமம்மான்" என்கிறபடியே பெரியபிராட்டியார்க்குப் பரதந்த்ரனாய் நிற்கும் நிலை. இவ்வர்த்த2ம் "ராமஸ்து" என்கிற ஸ்ரீ ராமாயண ஶ்லோகத்திலே வ்யக்தம். ஆகையிறே நாச்சியார் பார்ஶ்வத்திலே ப4வ்யனை அழகியமணவாளனை பங்குனி உத்தரத்தின்னாளிலே எம்பெருமானார் ஶரணம் பற்றிற்று. எல்லா ப்ரமாணங்களிலும் தே3ஹத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமஶ்லோகத்தில் ஈஶ்வரனாலே பேறென்கிறது; த்3வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறென்கிறது என்றபடி.*

*த்3வயத்தின் வாக்யார்த்த2மருளிச்செய்கிறார் (இதில் முற்கூறு)என்று தொடங்கி. ஆக, ப்ராப்ய ப்ராபக விஶேஷங்களை ஸம்பூர்ணமாக ப்ரகாஶிப்பிக்கிற இத்த்3வயமே ப்ரபத்தி மந்த்ரங்கள் எல்லாவற்றிலும் ப்ரத4ாநம் என்றதாயிற்று.*

அவதாரிகை ஸமாப்தை.



## ப்ரத2மபத3ார்த்த2ம்

### ஆறுபத3மானவிதில் முதல்பத3த்திலே இரண்டாம்பத3த்தை

---

*"ப்ரத்யூஷகாம் ப4ஜதி ஸம்ஸ்ருதி காலராத்ரே: பத்3மா ஸஹாய ஶரணாக3தி மந்த்ர ஏஷ:" என்கிற ப்ரப4ாவமுடைய த்3வயத்துக்கு ப்ரதிபத3ம் அர்த்த2மருளிச் செய்வதாகத் திருவுள்ளம்பற்றி ஸ்ரீமத் பத3ார்த்த2ம் அருளிச்செய்ய உபக்ரமிக்கிறார் (ஆறுபத3மான) இத்யாதி3. இதின் அர்த்த2த்தை ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராண ப4க3வச் சா2ஸ்த்ராதி3களில் ப்ரஸித்3த4மானபடியே ஸதா3சார்ய ஸம்ப்ரதா3ய க்ரமத்தாலே க3த்3யத்திலே விவரித்தருளினர். எங்ஙனேயென்னில்:— "ப4க3வந் நாராயணாபி4மதாநுரூப ஸ்வரூபரூப" என்று தொடங்கி ஸ்ரீமச்ச2ப்3த3ாபி4ப்ரேதத்தை அருளிச்செய்தார். "அகி2ல ஹேய ப்ரத்யநீக" இத்யாதி3யாலே ஸ்வரூபரூபகு3ணவிபூ4திகளைப் பரக்க அருளிச்செய்கையாலே நாராயணஶப்3த3ார்த்த2ம் வ்யாக்2யாதமாயிற்று. முற்படப் பிராட்டியைச் சொல்லச்செய்தே புருஷகாரத்வ நிர்வாஹார்த்த2மாக விபூ4திமத்4யத்தில் நிலை தோற்றுகைக்காக மீண்டும் நாராயண ஶப்3த3 வ்யாக்2யாநத்திலும் அருளிச்செய்தார். "ப்ரபத்3யே" என்கிற விடத்தில் உத்தமனாலே விவக்ஷிதமான அதி4காரிவிஶேஷம் "அநந்யஶரணோऽஹம்" என்று விவ்ருதமாயிற்று. "த்வத் பாத3ாரவிந்த3யுக3ளம் ஶரணம் ப்ரபத்3யே" என்கையாலே "சரணௌ" என்கிற ஶப்3த3மும் ஶரணஶப்3த3மும் க்ரியா பத3மும் ப்ரத3ர்ஶிதமாயிற்று. மேல் அர்த்த2க்ரமத்தாலே— முற்பட நமஸ்ஸாலே ப்ரார்த்தி2க்கிற அநிஷ்டநிவ்ருத்தியை வ்யாக்2யாநம் பண்ணிப் பின்பு இங்குள்ள பரப4க்த்யாதி3 புருஷார்த்த2 பூர்வகமாகச் சதுர்த்2யந்த பத3ங்களில் விப4க்தயபி4ப்ரேதமான பரம புருஷார்த்த2 லாப4த்தை வெளியிட்டருளினர். ஆகையாலே க3த்3யத்தில் அருளிச் செய்தவெல்லாம் த்3வயத்திலே விவக்ஷிதம். இது "த்3வய மர்த்த2ாநுஸந்த4ாநேந ஸஹ ஸதை3வம் வக்தா" என்கிற*

வெளியிடுகிற மூன்றும் பத3த்தில் உபாயத்துக்கு அபேக்ஷித மான புருஷகார கு3ண விக்ரஹங்கள் மூன்றும் தோன்றும்.

---

பாசுரத்தாலும் ஸூசிதம். (ஆறுபத3மான) இதி. இங்கே "ஷட்பதே3ாऽயம் த்3விச2ண்ட3:" என்கிற அஷ்டஶ்லோகீ வசநம் அநுஸந்தே4யம். (முதல் பத3ம்)—ஸ்ரீமந் நாராயண சரணௌ என்ற பத3ம். இதிலே புருஷகார கு3ண விக்3ர ஹங்கள் மூன்றும் தோன்றும் என்றந்வயம். "ஸ்ரீமந் நாராயணசரணௌ" என்று ஸமஸ்தமாகவும் யோஜிப் பர்கள். "கமலநயந வாஸுதேவ ப4வ ஶரணம்" என்கிற ப்ரயோக3த்தையும், "த்வமேவ உபாயபூ4தோ மே ப4வ" என்கிற வாக்யத்தையும், "அகலகில்லேன்" என்கிற பாட்டையும், "அகிஞ்சந: அநந்யக3தி: ஶரண்ய" என்கிற வாக்யத்தையும், "ஸ்ரீமந் நாராயண ஸ்வாமிந்" இத்யாதி மந்த்ராந்தரங்களையும் த்3வயவிவரணமான க3த்3யத்தையும் பார்த்து, "ஸ்ரீமந்! நாராயண!" என்று இரண்டு ஸம் பு3த்3தி4களாக்கி, "தவ" என்று ஒரு பத3த்தை அத்4யா ஹரித்தும் யோஜிப்பர்கள். இப்படி வ்யஸ்தமானாலும் ஸமஸ்தமானாலும் விஶேஷண விஶேஷ்யங்கள் நிற்கும் நிலைக்கு வைஷம்யமில்லை — என்றநுஸந்தே4யம். த்3வயம் ஷட்பத3ம் என்கிற நிர்வாஹத்தைத் திருவுள்ளம்பற்றி (ஆறு பத3மான) என்றருளிச்செய்கிறார். (இரண்டாம் பத3த்தை)—ஶரண ஶப்3த3த்தை. மூன்றும் பத3ம்—ப்ர பத்3யே என்கிற க்ரியாபத3ம். (உபாயத்துக்கபேக்ஷிதம்) என்றது—புருஷகார கு3ணவிக்3ரஹ விஶிஷ்டவஸ்துவிலே ஶரணாக3தி என்றபடி.

பத3த்ரயாத்மகமான ப்ரத2மபத3த்தில் ஸ்ரீ ஶப்3த3ம் புருஷகாரத்தைச் சொல்லுகிறது. உபாயம் உபேயார்த்த மாயிருக்கச் செய்தேயும், வ்யுத்பத்தி வேளையன்றியிலே அநுஷ்டா2நவேளையாய், உபாயாநுஷ்டா2நாநந்தரம் உபேய ஸித்3தி4யாகையாலே ப்ரத2மோபாத்தமானவோபாதி, இவ



## ஸ்ரீஶப்3தா3ர்த்த2ம்

'ஸ்ரீ' என்கிறவிது புருஷகாரமான விஷ்ணுபத்னியினுடைய ஸ்வரூபநிரூபகமான முதல் திருநாமம். ஸேவையைக் காட்டு

---

வுபாயஸ்வீகாரத்துக்கு முன்னே வேணுமே சேரவிடும் புருஷகாரமும். ஆகையாலே, ப்ரத2மத்திலே புருஷகார ப4ாவத்துக்கு ஏகாந்தமான ஸ்வப4ாவவிஶேஷங்களோடே கூடியிருக்கிற வஸ்துவிஶேஷத்தை நிர்தே3ஶிக்கிறது ஸ்ரீ ஶப்3த3ம். இதுதன்னை அருளிச்செய்கிறார் (ஸ்ரீ) என்று தொடங்கி. "ஸ்ரீரிதி ப்ரத2மம் நாம லக்ஷ்ம்யா:" என்ற வசநத்தையுட்கொண்டருளிச்செய்கிறார் (முதல் திருநாமம்) என்று. ப4க3வத்3 வாசகங்களில் அகாரம் ப்ரத2மமானாப் போலே பிராட்டியின் வாசகங்களில் ஸ்ரீஶப்3த3த்துக்கு ப்ராத2ம்யம் என்றபடி. (தா4து) என்று—"ஶ்ரிஞ் ஸேவா யாம்" என்று தா4து. தா4துவின்மேலே ஸுப் வராது. ஆகையாலே கர்மணியாதல் கர்த்தரியாதல் க்யுப் வந்து, க்ருத3ந்தமானதின் மேலே ஸுப்; அத: "ஸ்ரீ:" என்பர் வையாகரணர். ஸ்ரீ ஶப்3த3ம் ஸம்பத3ாதி3களுக்கும் வாசக மாக லோகத்திலே நடந்து போரக் காண்கையாலே, அத்தை வ்யாவர்த்திக்கைக்காக (விஷ்ணுபத்னி) என்றது. ஆகையிறே "லக்ஷ்மீ: பத்3மாலயா பத்3மா கமலா ஸ்ரீ: ஹரிப்ரியா" என்று திருநாமங்களோடே ஸஹபடி2த மாயிற்று. இதுதான் எல்லாத் திருநாமங்கள் போலன்றிக்கே "ஸ்ரீரிதி ப்ரத2மம் நாம லக்ஷ்ம்யா:" என்கிறபடியே இவ ளுக்கு ப்ரத2மாபி4தா4நமாயிருக்கும். "அ இதி ப4க3வதோ நாராயணஸ்ய ப்ரத2மாபி4தா4நம்" என்று அகாரம் ஈஶ்வர னுக்கு ப்ரத2மாபி4தா4நமானாற்போலேயாயிற்று இவளுக்கும் இது ப்ரத2மாபி4தா4நமாயிருக்கும்படி. அது அவனுடைய ரக்ஷகத்வத்துக்கு ஏகாந்தமான ஸ்வப4ாவங்களைச் சொல்லக் கடவதாயிருக்கும்; இது இவளுடைய புருஷகாரத்வத்துக்கு

கிற தா4துவிலேயான இப்பத3ம்—ஸ்ரீயதே 'ஶ்ரயதே' என்று இரண்டுபடியாக—மூன்று வகைப்பட்ட ஆத்மகோடியாலும்

---

ஏகாந்தமான ஸ்வபா4வங்களைச் சொல்லக்கடவதாயிருக்கும்—என்றபடி. இனி, இந்த ஸ்ரீஶப்3த3த்துக்கு அர்த்த2ம் அருளிச்செய்வதாக, ப்ரத2மம் இதற்குள்ள வ்யுத்பத்தி த்3வயத்தை அருளிச்செய்கிறார் ("ஸ்ரீயதே" "ஶ்ரயதே") என்று. அதாவது—"ஸ்ரீஞ் ஸேவாயாம்" என்கிற தா4துவிலே "ஸ்ரீயதே இதி ஸ்ரீ:" "ஶ்ரயதே இதி ஸ்ரீ:" என்று ஸித்3த4மான கர்மணி வ்யுத்பத்தியையும் கர்த்தரி வ்யுத்பத்தியையும் சொன்னபடி. இவ்வ்யுத்பத்தித்3வயத்துக்கும் அர்த்த2ம் அருளிச்செய்கிறார் (மூன்று) இத்யாதி3. அதாவது—இவ்வுப4ய வ்யுத்பத்திக்கும் அர்த்த2ம், ஸ்ரீயதே என்று எல்லாராலும் ஸேவிக்கப்படாநின்றாள் என்கையாலே ஸகல சேதநர்க்கும் இவளைப்பற்றித் தங்களுடைய ஶேஷத்வரூபஸ்வரூபலாப4மாய், ஶ்ரயதே என்று ஈஶ்வரனை ஸேவியாநின்றாள் என்கையாலே, இவள் தனக்கும் ஈஶ்வரனைப்பற்றித் தன்னுடைய ஸ்வரூபலாப4மாயிருக்கும் என்கை. இவள் தனக்குச் சேதநவிஷயத்தில் ஶேஷித்வமும், ஈஶ்வரவிஷயத்தில் ஶேஷத்வமும் என்றும் உண்டாயிறே யிருப்பது. ஆகையால், இந்த ஸேவ்யத்வஸேவகத்வங்கள் இரண்டும் இவளுக்கு நித்யமாய்ச் செல்லாநிற்கும் என்றதாயிற்று. சேதநர்களாலே ஆஶ்ரயிக்கப்படுமென்றும், இவர்களை உஜ்ஜீவிப்பிக்கைக்காக ஸர்வேஶ்வரனைத் தான் ஆஶ்ரயித்திருக்கும் என்றும் கூறுகையால், "பித்ருத்வத்ப்ரேயாந்....விஸ்மார்ய ஸ்வஜநயஸி மாதா தத3ஸி ந:" என்கிறபடியே ஸாபராத4ரானவர்கள்பக்கல் ஸ்வயம் ஹிதைஷியாய் த3ண்ட3த4ரனை ஸர்வேஶ்வரனுடைய சீற்றத்தை ஆற்றி அவனுடைய ஸஹஜகாருண்யம் இவர்களுக்கு உஜ்ஜீவகமாம்படி பண்ணிக்கொடுக்கையாலே மாத்ருத்வ ப்ரயுக்த வாத்ஸல்யாதிஶயத்தாலே புருஷகாரமாய் நிற்கிற நிலை சொல்லிற்றும். "அவிஜ்ஞாதா



ஸேவிக்கப்படுகிறமையும், தான் நிழல்போலே எம்பெருமானை ஸேவிக்கும்படியையும் காட்டக்கடவது. சேரவிடுவார்க்கு

---

இத்யாதி3களிற்போலே. இங்கு "விஸ்மார்ய" என்றதுக்கும், "அல்லிமலர்மகள்போக மயக்குக்கள்" இத்யாதி3களுக்கும் ஸதா3 ஸர்வஜ்ஞனான ஈஶ்வரனுடைய நிக்3ரஹாபி4ஸந்தி4 நிவ்ருத்தியிலே தாத்பர்யம். ஸாபேக்ஷனான புருஷனுக்கு அபேக்ஷிதம் தலைக்கட்டிக் கொடுக்கவல்ல சேதநன் அபி4 க3ம்யனுக்கு உபாயமாக வரிக்கப்பட்ட சேதநாந்தரத்தைப் புருஷகாரம் என்று வ்யவஹரிப்பர்கள். இப்புருஷகாரம் ப2லத்துக்குப் பரம்பரயா காரணம். "அர்த்த2ஸ்வபா4வாநுஷ்டா2நலோகத்3ருஷ்டிகு3ருக்திபி4: ஶ்ருத்யா ஸ்ம்ருத்யா ச ஸம்ஸித்3த4ம் க4டகார்த்த2ாவலம்ப3நம்" இவற்றில் அர்த்த2ஸ்வபா4வமாவது — ஈஶ்வரனைப்போலே பித்ருத்வாநுரூபமான ப்ரதாபோஷ்மலத்வம் கலசாதே மாத்ருத்வ ப்ரயுக்தங்களான வாத்ஸல்யாதி3கள் அதிஶயித்து, "ந கஶ்சிந்நாபராத்4யதி" "க: குப்யேத் வாநரோத்தம" "மர்ஷயாமீஹ து3ர்ப3லா" என்கையே ஸ்வபா4வமாயிருக்கையும், வால்லப்4யாதிஶயத்தாலே, இவளை முன்னிட்டால் அவன் மறுக்கமாட்டாதொழிகையும். இவ்வர்த்த2ஸ்வபா4வத்தாலே இவளைப் பற்றுவார்க்குப் புருஷகாராந்தராபேக்ஷை உண்டாம் அநவஸ்தை2 வாராது. அநுஷ்டா2நமாவது:— ப்ரஹ்லாத3 விஷயத்தில் ப்ரேமாதிஶயத்தாலே, ப்ரதிகூல விஷயத்தில் பிறந்த சீற்றத்தின் கனத்தைக் கண்டு அணுக அஞ்சின ப்3ரஹ்மாதி3கள் இவளை ஶரணமாகப்பற்றி இவள் முன்னிலையாக ஸ்ரீந்ருஸிம்ஹரூபனை ஸர்வேஶ்வரனைக் கிட்டி ஸ்தோத்ரம் பண்ணினார்கள் என்று புராண ப்ரஸித்3த4ம். "ஸீதாமுவாச அதியஶா: ராக4வம் ச மஹாவ்ரதம்" "ஸீதா ஸமக்ஷம் காகுத்ஸ்த2ம்" இத்யாதி3களிலும் கண்டுகொள்வது. லோகத்3ருஷ்டியாவது— அந்த:புர பரிஜநத்தை அபராத4ஸ்பர்ஶையுண்டானாலும் ராஜாக்கள் அல்பங்களான ப்ரஸாத3நங்களாலே க்ஷமிக்கக்

இரண்டிடத்திலும் உறவு வேண்டுகையாலே சேதனர்க்குத் தாயாய் முன்னிலே தேடாமல் பற்றி ஸ்வரூபம் பெறலாய், அவனுக்கு தி3வ்யமஹிஷியாய்க் கிட்டித்தன் ஸ்வரூபம்பெறலாய்

---

காண்கை. இவ்வர்த்த2ம் "மாதர் லக்ஷ்மி யதை2வ மைதி2லஜந:" என்கிற ஶ்லோகத்திலும் விவக்ஷிதம். கு3ருக்தி யாவது—நம்மாழ்வார் முதலான ஆசார்யர்களுடைய "அகலகில்லேன்" முதலான பாசுரங்கள். இவற்றுக்கு மூலமான ஸூக்திவிஶேஷ ரூபைகளான ஶ்ருதிகளையும் கண்டு கொள்வது. இவையடியாக வந்த ஸ்ம்ருதிகளாவன— "வாச: பரம் ப்ரார்த்த2யிதா ப்ரபத்3யேந்நியத: ஶ்ரியம்" இத்யாதி3களான ஶௌநகாதி3 வாக்யங்கள். இப்படி இவளுக்கு ஸர்வேஶ்வரன் திருவடிகளில் க4டகத்வம் ப3ஹு ப்ரமாண ஸித்3த4மாகையால் இங்கும் இவ்விவக்ஷை கொள்ள உசிதம். வ்யுத்பத்தி த்3வயத்தாலும் — ஸேவிக்கப்படா நின்ருள். ஸேவியா நின்ருள் என்று ஸேவாவிஷயமாயிருக்கும் ஸேவைக்கு ஆஶ்ரயமுமாயிருக்கும் என்கிறது. "ஈஶ்வரீம் ஸர்வபூ4தாநாம்" "விஷ்ணுபத்நீ" என்னக் கடவதிறே. சேதனர்களாலே ஸேவிக்கப்படா நின்ருள்: ஆகையாலே ஸேவா விஷயமாயிருக்கும். தான் ஈஶ்வரனை ஸேவியா நின்ருள்; ஆகையாலே ஸேவாஶ்ரயமுமாயிருக்கும். ஆனபோதிறே கர்மகர்த்ருப4ாவவிரோத4மின்றிக்கேயொழிவது. (புருஷகாரமான) என்று—"நேத்ருத்வம்" என்றருளிச்செய்தாரிறே ஸ்ரீபராஶரபட்டர். இத்தால் பிராட்டிக்குப் புருஷகாரத்வமே அஸாத4ாரணமென்று தோற்றுகிறது. இத்தால் இவளுக்கு உபாயத்வமில்லை என்கிறது. உபாயத்வமில்லையென்கிறது எங்ஙனேயென்னில்—"மாமேகம் ஶரணம் வ்ரஜ" "தமேவ ஶரணம் க3ச்ச2" "மாமேவ யே ப்ரபத்3யந்தே" "தமேவ சாத்3யம் புருஷம்" "யோ ப்3ரஹ்மாணம் வித3தா4தி பூர்வம் யோவை வேதா3ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை| தம் ஹ தே3வம் ஆத்மபு3த்3தி4 ப்ரகாஶம் முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்3யே||" "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்" "கண்ணனல்லால் இல்லை கண்டீர் சரண்" "களைகண் மற்றிலேன்" இத்யாதி3களில் வ்யக்த்யந்தர நிஷேத4பூர்வகமாக ஸர்வகாரணவஸ்துவுக்கே உபாயத்வத்தை விதி4க்கையாலே. ஆக, பிராட்டிக்குப் புருஷகாரத்வம் விஶேஷம்—அஸாத4ாரணாகாரம். ப4க3வானுக்கு விஶேஷம்—அஸாத4ாரணாகாரம் உபாயத்வம் என்றபடி.



"ஸ்ரீமந்நாராயணசரணௌ" என்று உபாயதயா வக்ஷ்யமாணனை நாராயணனுக்கு விஶேஷணமாக ஸ்ரீமத்தையைச் சொல்லாநின்ருல், நாராயண ஶப்3த3த்தினுல் சொல்லப்புகுகிற கு3ணவிஶேஷங்கள் விஶேஷணத்வேந உபாயஶரீரத்தில் அந்விதமாகிறவோபாதி, இவளும் உபாயாவயவமாக ப்ராப்தையுமாய், மாதாபிதாக்களிருவரும் சேரவிருந்து ப்ரஜாரக்ஷணம் பண்ணுகை ப்ராப்தமுமாய், அதுக்கு மேலே "வேரி மாருத பூமேலிருப்பாள் வினை தீர்க்கும்" என்று உபாயக்ருத்யமான விரோதி4நிவர்த்தகத்வம் இவ்வர்த்த2த்திலே நிஷ்ட2ரான நம்மாழ்வார் திருவுள்ளத்தாலுமுண்டாய். ப்ரதே3ஶாந்தரங்களில் இவளைப் புருஷகாரமாக நினைத்துச் சொல்லுகிருர்களென்கிற அவையும் உபாயப4ாவத்திலே அந்வயிப்பிக்க யோக்3யமுமாய், அதுக்கு மேலே, "அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:" என்று மேலே அநுஷ்டே2க்கப்புகுகிற ப்ரபத்தி தானே, புருஷகாரக்ருத்யத்தைச் செய்யவற்ருகையாலும், மாட்டாதாகில். இவள் ஸ்வாதந்த்ர்யத்தை ஆற்றிச் சேரவிட, உபாயபூ4தனை ஈஶ்வரன் ரக்ஷிக்க அமைந்திருக்க உபாயாந்விதமான இவனுடைய ப்ரபத்த்யநுஷ்டா2நம் நிஷ்ப2லமாம்படியுமாயிருக்க, இவளுக்கு உபாயஶரீரத்திலே அந்வயமில்லை; புருஷகாரத்திலே என்று ஒதுக்கித் தருவார் ஆரென்னில்:

விஶேஷணத்வமுண்டேயாகிலும், விஶேஷணபூ4தமான கு3ணவிஶேஷங்களோபாதி, உபாயோபயோகி3த்வம் அவளுக்கில்லாமையாலும், ஸமாஶ்ரயணைகாந்தமான ஸௌஶீல்யாதி3 கு3ணோத3ய விரோதி4யான ஸ்வாதந்த்ர்யத்தைப் புருஷகாரபூ4தையான இவள் ஆற்றினாலும், அவன் கார்யம் செய்யும்போதைக்கு "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" என்கிறபடியே உபாயப்ரார்த்த2நாரூபமான ப்ரபத்தி வேண்டுகையாலும், "வினை தீர்க்கும்" என்கிற இடம்

"களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்கிறவருடைய உக்தியாகையாலே இத்திருவாய்மொழி அநுஸந்தித்தவர்கள் பக்கல் இவளுக்குண்டான ஆதராதிஶயப்ரகாஶகமாகையாலும், இவளுக்குப் புருஷகாரபாவத்திலே நோக்காகக் கடவது.

இவளுக்கு உபாயபாவத்தில் அந்வயமுண்டாகில், ஸாத்யபூதமான கர்மஜ்ஞாநாதிகளுக்கு "*பலமத:*" "*ஸ ப்ரீதோ லம் பலாய*" என்று, ஆராதநப்ரீதனான ஈஶ்வரமுகத்தாலே இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரரூபமான பலஸித்தி இவனாலேயாதல், அங்ஙனன்றியிலே பலோபாதாநஹேதுவான ஜ்ஞாநஶக்த்யாதிகளுக்கு உத்பாதகையாதலாகவேண்டும். தான் பலப்ரஸாதகையாகில், "*யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்*" "*பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச*" "*தேஜோபலைஶ்வர்ய மஹாவபோத ஸுவீர்யஶக்த்யாதிகுணைகராஶி:*" என்று ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் ஈஶ்வரனுக்குச் சொல்லுகிற ஜ்ஞாநஶக்த்யாதிகுண விஶேஷங்களின்றியிலே ஒழியவேணும். உண்டாகில் இவளையொழியவே ஈஶ்வரன்றானே கார்யம் செய்ய க்ஷமனே. அக்குணங்களை உத்பாதிக்கிறாளாகில் குணங்களுக்கு ஸ்வாபாவிகத்வமின்றியிலே ஒழியும்.

ஸௌஶீல்யாதிகளோபாதி திரோஹிதமானவற்றை ப்ரகாஶிப்பிக்கிறாளென்னில்; ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாராதிகளிலே இடைவிடாமல் விநியோகங்கொண்டு போருகிற ஜ்ஞாநஶக்த்யாதிகளுக்கு, ஸௌஶீல்யாதிதிரோதாயகமான ஸ்வாதந்த்ர்யத்தோபாதி ஒரு திரோதாநமில்லையே. உண்டாகில் ஸ்ருஷ்ட்யாதிகள் நடவாதொழியவேணும். ஸர்வதா அந்விதையாமாகில் ஸ்வவிரோதி நிவ்ருத்தியில் "*தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத்*" என்றிருக்கக் கூடாதே. குணவிஶேஷங்களே அமைகையன்றே, "*ஸ்வாம் ஶேயம் ஹரிஶ்ரேஷ்ட க்ஷிப்ரம் மாம் ப்ராப்ஸ்யதே பதி:, அந்தராத்மா ஹி மே ஶுத்தஸ் தஸ்மிம்ஶ்ச பஹவோ குணா:*" என்று தன் பக்கல் அநந்யோபாயத்வமும் அவன் பக்கல் குணவிஶேஷங்களுமே பலஸித்திக்கு அபேக்ஷிதமாகத் தான் அறுதியிட்டு வைத்தது.



நாம் உபாயமாக யாதொரு வஸ்துவை ஸ்வீகரிக்கிறோம்; அவ்வஸ்துவுக்கு இவள் ஸ்வரூபம் நிரூபகமாகையாலே, ப்ரணவத்தில் ப்ரதமபதத்திற்போலே "*யத்யபி ஸச்சித்த:*" என்கிற குணஸித்திந்யாயத்தாலே, அவர்ஜநீயமாய் அந்வயியாதோ? என்னில்; ஸ்வரூபநிரூபகத்வேந அவர்ஜநீயபந்தமுண்டேயாகிலும், உபாயதஶையில் கண்டுகொள்வதொரு ப்ரயோஜநமில்லாமையாலே, ஸ்வரூபநிரூபகங்களான ஜ்ஞாநாநந்தங்களோபாதியும் ஸ்வரூபாஶ்ரயமான குணாந்தரங்களோபாதியும் குமிழ்ந்து போமத்தனை.

இவற்றுக்கு ப்ரயோஜநமின்றிக்கே ஒழிகைக்கு ஹேது அவனுடைய நைரபேக்ஷ்யமாகில், சில குணவிஶேஷங்கள் உபாயதயா அந்வயிக்கிறபடி என்னென்னில்: அவை கார்யோபயோகிகளாகையாலும், குணத்வேந அப்ருதக்ஸித்தப்ரவ்ருத்திகமாகையாலும், குணி குணத்வாரா கார்யம்செய்கை நைரபேக்ஷ்யத்துக்குக் குறையில்லாமையாலும், அவற்றுக்குத் தட்டில்லை இவள் கார்யாநுபயுக்தையாகையாலும், த்ரவ்யத்வேந ப்ருதக்ஸித்திப்ரவ்ருத்தி யோக்யதையுண்டாகையாலும், அத்தாலே உபாயநைரபேக்ஷ்யத்துக்குக் கொத்தையாயறுகையாலும், உபாயபாவத்தில் அந்வயமில்லை. ஆகையாலே, மோக்ஷத்வதஶையிலும் ப்ராப்யத்வதஶையிலும் ஒரு மிதுநமேயாகவேண்டினவோபாதி, உபாயதஶையிலே ஸ்வேதரஸகலஸஹாயாஸஹமாயிருக்கையாலே, இவளுக்கு உபாயபாவத்தில் அந்வயமின்றியிலே புருஷகாரபாவத்திலேயாகக் கடவது.

இச்சேதநனோட்டை ஸம்பந்தம், ஈஶ்வரனுக்கும் பிராட்டிக்கும் ஒத்திருக்க, அவன் புருஷகாரத்வாரா ஸமாஶ்ரயணீயனாகைக்கும், இவள் புருஷகாரபூதையாகைக்கும் ஹேது என்னென்னில்: அவன் புருஷோத்தமனாய், பும்ஸ்த்வப்ரயுக்தமாய் வரும் கார்கஶ்யமுடையனாகையாலும், "*தேவதேவோ ஹரி: பிதா*" என்கிறபடியே பித்ருத்வப்ரயுக்தமாய் வரும் ஹிதபரத்தாலும், அதுக்குமேலே ஸ்வேதரஸகலபதார்த்தஸார்த்தநிருபாதிக நிர்வாஹகனாகையாலே "*தாஹ; பச*" என்னும்படியான க்ரௌர்யத்தாலும், அவனை ஆஶ்ரயிக்கும்போது புருஷகாரத்வாரா ஆஶ்ரயிக்கவேண்டும். இவள் நாரீணாமுத்தமையாகையாலே, ஸ்த்ரீத்வப்ரயுக்தமாய் வரும்

மார்த3வத்தாலும், "த்வம் மாதா ஸர்வலோகாநாம்" என்கிறபடியே மாத்ருத்வப்ரயுக்தமான வாத்ஸல்யாதிஶயத்தாலும், தத்தத்கர்மாநுகு3ணநிர்வஹணமில்லாமையால் வரும் மாது4ர்யத்தாலும் அவனிற்காட்டில் இவளுக்கு நெடுவாசியுண்டாகையால் இவள் புருஷகாரபூ4தையாகக்கடவள். (புருஷகாரபூ4தையான பிராட்டி உத்3ப4வித்த வாத்ஸல்யாதி3கு3ணவிஶிஷ்டன் உபாயம் என்றபடி.)

இந்த கு3ணத்3வயத்துக்குப் புருஷகாராபேக்ஷையுண்டாகில் உபாயம் ஸாத்4யமுமாய் ஸாபேக்ஷமுமாம்; அநுத்3பூ4தமான கு3ணங்கள் உத்3பூ4தங்களாகிறதாகையாலே. உபாயத்துக்கு ஸாத்4யத்வமுண்டாம்; உபாயஸ்வரூபோத்பத்திக்கு ஸஹகாரிஸாபேக்ஷத்வமுண்டாகையாலே, ப4க்தியோபாதி அங்க3ஸாபேக்ஷத்வமுமாம்; ஸ்வரூபக3தமாய் திரோஹிதமாய்க் கிடந்தத்தை ப்ரகாஶிப்பிக்குங்காட்டில் புருஷகாரத்துக்கு அங்க3ஸாத4நத்வம் உண்டாமோ? என்ன ஒண்ணாதபடி. ஆத்மத4ர்மமான ப4க்தி விஶேஷத்துக்கு ப்ரகாஶகமான கர்மயோகா3தி3களை அங்க3ஸாத4நமாகச் சொல்லாநின்றது: அதுக்கு மேலே, ஆத்மத4ர்மமாய் அப்ரகாஶமான அபஹதபாப்மத்வாதி3கு3ணங்களை ப்ரகாஶிப்பிக்கிற ஈஶ்வரனுக்கு ப்ரதா4நஸாத4நத்வவ்யவஹாரம் உண்டாகாநின்றது. ஆகையாலே, உபாயாந்தரவ்யாவ்ருத்திரூபமான ஸித்3த4த்வநைரபேக்ஷ்யங்கள் இரண்டும் குலையுமே என்னில்: உபாயமாவது:— இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரகரமாய் இருப்பதொன்றாய். அப்படிப்பட்ட உபாயமாவது, ஜ்ஞாநஶக்த்யாதி3கு3ணவிஶிஷ்டனான ஈஶ்வரனாகையாலே வாத்ஸல்யாதி3கு3ணங்களுக்கு உபாயத்வமில்லை; உள்ளது ஆஶ்ரயணைகாந்ததையே. ஆகையாலே உபாயபூ4தமான ஜ்ஞாநஶக்த்யாதி3களுடைய உத்பத்த்யாதி3களுக்குப் புருஷகாராபேக்ஷை இல்லாமையாலே. உபாயாந்தரவ்யாவ்ருத்திரூபமான ஸித்3த4த்வத்துக்கும் நிரபேக்ஷத்வத்துக்கும் ஒரு குறையில்லை. ஆகையிறே, "மாம்" என்கிற ஸ்வீகாரவிஷயத்திலே ஸ்வீகாரோபயோகி3யான ஸௌஶீல்யாதி3களை அநுஸந்தி4த்து, "அஹம்" என்கிற பாபவிமோசகன் பக்கலிலே ஜ்ஞாநஶக்த்யாதி3களை அநுஸந்தி4த்தது.

ப்3ரஹ்ம ஸ்வரூப க்3ராஹக ப்ரமாணம் "யேந ஜாதாநி ஜீவந்தி" இத்யாதி3களிலே உபாயத்வேந க்3ரஹிக்கை



யாலும், "ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி" என்கிற உக்த்யநந்தரம் ஶோகநிவ்ருத்தி பிறக்கையாலும், இவ்வுக்திக்குமுன் ஶோகநிவ்ருத்தி பிறவாமையாலும், அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமான இஷ்டப்ராப்தி நிர்ஹேதுக க்ருபாவிஶிஷ்டனான ஸர்வேஶ்வரன்தன்னாலே உபபந்நமாகையாலும், "ஸர்வலோக ஶரண்யாய" என்று ஸர்வஶரண்யனாகச் சொல்லுகையாலும், இவள் ஸ்வரூபத்தை உபாயத்வேந க்3ரஹிப்பதொரு ப்ரமாணமில்லாமையாலும், இவனுடைய உக்தியையொழிய ப4க3வது3க்தியாலே ஶோகநிவ்ருத்தி பிறக்கையாலும், இவள் ஸஹகாரியாதபோதும் உபாயத்வம் உபபந்நமாகையாலும், இவளுக்கு உபாயத்வம் இல்லையென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம். இவளுக்குப் புருஷகாரத்வமே ஸ்வரூபமென்றும், உபாயத்வமே தனக்கு ஸ்வரூபமென்றும் ப4க3வச்சா2ஸ்த்ரத்திலே எம்பெருமான் தானே அருளிச்செய்தானிறே—"மத்ப்ராப்திம் ப்ரதி ஜந்தூநாம் ஸம்ஸாரே பததாமத4: | லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்தி3ஷ்டா பரமர்ஷிபி4: || மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா2 லக்ஷணம் ப4வேத் ||" "அஹம் மத்ப்ராப்த்யுபாயோ வை ஸாக்ஷாத் லக்ஷ்மீபதி: ஸ்வயம் | லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லபா4 ப்ராப்தியோகி3நீ || ஏதஸ்யாஶ்ச விஶேஷோ஽யம் நிக3மாந்தேஷு ஶப்3த்3யதே || ஆகிஞ்சந்யைகஶரணா: கேசித் பா4க்3யாதி4கா: புந: | மத்பதா3ம்போ4ருஹத்3வந்த்3வம் ப்ரபத்3ய ப்ரீதமாநஸா: | லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருதவந்தோ வராநந | மத்க்ஷமாம் ப்ராப்ய ஸேநேஶ ப்ராப்யம் ப்ராபகமேவ மாம் || லப்3த்4வா க்ருதார்த்தா2: ப்ராப்ஸ்யந்தே மாமேவாநந்யமாநஸா: ||" இத்யாதி3களாலே. இத்தால், க்ஷமாத3யுத3பா4வநத்3வாரா ப4க3வதீ3யோபாயபா4வப்ரயோஜகத்வமாகிற புருஷகாரத்வம் பிராட்டிக்குத் ததி3தராவ்ருத்தியாய், தத்3வ்ருத்தியான த4ர்மமென்றும், உபாயாநபேக்ஷ உபாயத்வமாதல், ப2லப்ரத3த்வே ஸதி ப2லகரணத்வமாதலாகிற உபாயத்வம்ஈஶ்வர

னுக்கு அஸாத4ாரண த4ர்மமென்றும் சொல்லிற்றாய்த்து. ( அந்யதா2 லக்ஷணம் ந ப4வேத் ) ப்ராப்தி பூர்வப4ாவியாய், புருஷகாரத்வாதிரிக்தமாய் ப்ராப்த்யுயோகி3யான அஸா- த4ாரண த4ர்மமில்லை என்றபடி. இங்கே "அந்யத் லக்ஷணம் நாஸ்தி" என்கிற இத்தாலே புருஷகாரத்வம் லக்ஷணம் என்று ஸித்3த4ம் என்று கருத்து. (அஹம்) இத்யாதி3— "லக்ஷ்மீபதி: அஹம் ஸாக்ஷாத் ஸ்வயம் மத் ப்ராப்த்யு பாய:" (லக்ஷ்மீபதி:) என்று விஶ்வாஸஹேது புருஷகார ஸம்ப3ந்த4மும். ( ஸாக்ஷாத் ) என்று உபாயாந்தர வ்யா வ்ருத்தியும். ( ஸ்வயம் ) என்று லக்ஷ்மீவ்யாவ்ருத்தியும் ஸித்3த4ம். ( லக்ஷ்மீ: ) இத்யாதி3—( மம வல்லப4ா லக்ஷ்மீ புருஷகாரேண ப்ராப்தி யோகி3நீ ) புருஷகாரத்வமாகிற ப்ராப்தி ஸம்ப3ந்த4த்தையுடையவளென்றபடி. இங்கே, ( மம வல்லப4ா ) என்று புருஷகாரஹேதுவால்லப்4யம் சொல்லிற்று. இங்கே. "ரத2ந்தரே ப்ரஸ்தாயமானே ஸம்மீலயேத்। ப்3ருஹதி ப்ரஸ்தாயமானே ஸமுத்3ரம் மனஸா த்4யாயேத்" இத்யத்ர, ரத2ந்தர ஸாமம் ப்ரஸ்தாயமான மாய் இருந்துள்ளவளவில் ஸம்மீலநமும். ப்3ருஹத்ஸாமம் ப்ரஸ்தாயமாநமாயிருந்துள்ளவளவில் ஸமுத்3ரத்4யாநமும். "ஸாம்நோர் வ்யவஸ்த2யா யஸ்மாத் நிர்தே3ஶோ மீல நாதி3ஷு। தஸ்மாந் ந ஸங்கரோ யுக்த: ந த்வேவம் ப்ரோக்ஷணாதி3ஷு" என்று வ்யவஸ்தா2ம்நாநத்தாலே வ்ய வஸ்தி2தங்களென்று. "ஏகார்த்த2த்வாத் விப4ாக3: ஸ்யாத்" என்கிற நாவமிகாதி4கரணத்திலே நிர்ணயிக்கப்பட்டது. அந்த ந்யாயத்தாலே "அஹம் மத்ப்ராப்த்யுபாய:. லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லப4ா ப்ராப்தியோகி3நீ" என்று வ்ய வஸ்தா2ம்நாநத்தாலே. ஈஶ்வரனுக்கு உபாயத்வமும் பிராட்டிக்கு புருஷகாரத்வமும் வ்யவஸ்தி2தமென்று ஸ்பஷ்டம். ( ஏதஸ்யாஶ்ச விஶேஷோऽயம் ) இத்யாதி3— ( அஹம் மத் ப்ராப்தி ) இத்யாதி3 பூர்வவாக்யத்திலே ப்ரதி நியத த4ர்மத்3வயம் ப்ராப்தமாகையாலே. ப்ராபகவாக் யாவக3த த்3வித்வவிருத்3தை4கத்வமும் ப்ராபகவாக்யாவக3த



ப3ஹுத்வ விருத்3த4க்3ரஹைகத்வம்போலே அவிவக்ஷிதம். ஆக. "மம ஏதஸ்யாஶ்ச இமௌ விஶேஷௌ—உபாயத்வ புருஷகாரத்வரூப ப்ரதிநியத த4ர்மௌ" என்று பர்யவ ஸிதம். வேதா3ந்த ப்ரதிபாத்3யமான அர்த்த2ம் இந்த ப்ரதிநியத த4ர்மங்கள் என்கிறவித்தால், ஸர்வத்ர உபாய ப்ரகரணங்களிலே. "உதா3ராம்" "அம்ருதம் து3ஹாநா" "பரநிர்வாணதா3யிநீ" "ஸம்ஸாரார்ணவதாரிணீ" "விமுக்தி ப2லதா3யிநீ" "அஹம் ஹி ஶரணம் ப்ராப்தா" "ஶரணம் ப4வ மேऽம்பு3ஜே" "ஏஷா ப்ரஸாத3 ஸுமுகீ2 ஸ்வ பத3ம் ப்ராபயிஷ்யதி" "அலமேஷா பரித்ராதும்" "வேரி மாருத பூமேலிருப்பாள் வினைதீர்க்கும்" "பூவளரும் திரு மகளால் அருள்பெற்றுப் பொன்னுலகில் பொலிவர்" "அரவிந்த3 லோசந மந: காந்தா ப்ரஸாத3ாத்" "அஞ்ஜலி ப4ரம் வஹதே விதீர்ய" "பத்3மாயா: தவ ச சரணௌ ந: ஶரணயந்" "அந்ய கல்யாண காரணம்" இத்யாதி3ரூபேண உபாயத்வ ப்ரதிபாத3கங்களாக ப்ரதீயமானங்களான வாச்யங்களுக்கு இந்த ப்ரதிநியதத4ர்மங்களே அர்த்த2 மென்று ப்ரப3லப்ரமாணமான ப4க3வச்சா2ஸ்த்ரமே வேதா3ந்த தது3பப்3ரும்ஹணஸ்த2 வாக்யங்களுக்கு வ்யாக்2 யாநம் பண்ணினபடியால் தத்3விருத்3த4கல்பநம் கூடா திறே. ( ஏதஸ்யா: அயம் ச விஶேஷ: ) என்றந்வயிக்கில், ஸமுச்சேதவ்யம் ப்ரக்ருதமல்லாமையாலே ஸமுச்சயம் வ்யர்த்த2மாம். ( ஏதஸ்யா: அயம் து விஶேஷ: ) என்னப் பார்க்கில், சகாரத்துக்குத் "து"ஶப்3தா3ர்த்த2த்வம் க்லிஷ்டம். சகாரத்துக்கு பி4ந்நக்ரமத்வமும் க்லிஷ்டம். (அயமேவ விஶேஷ:) என்னப்பார்க்கில். விஶேஷாந்தரங்கள் பலவுமிருக்கையாலே பா3த4மும் ப்ரஸங்கி3க்கும். இருவர்க் கும் த4ர்மப்ரதிநியமம் ப்ரக்ராந்தமாகையாலே. புருஷ காரத்வ மாத்ரத்துக்கு நிக3மாந்த ப்ரதிபாத்3யத்வகத2நம் ந்யூநமாகையாலே, ( ஏதஸ்யாஸ்து அயம் விஶேஷ: நிக3 மாந்தேஷு ஶப்3த்3யதே ) என்னவும் கூடாது. ஆகையாலே, "மம ஏதஸ்யாஶ்ச இமௌ விஶேஷௌ நிக3மாந்தேஷு

ஶப்3த்3யேதே" என்றே பொருளாகக் கடவது. உபாய த்வத்தில் ப்ரமாணமாக ப்ரத்யாஶாவிஷய வசநங்களெல் லாம் உப4யாப்4யுபேத புருஷகாரத்வத்திலே உபக்ஷீணங்க ளாகையாலே அநந்யதா2 ஸித்3த4ப்ரமாணமுமில்லை. "ஶ ப்4ராது: சரணௌ க்3ராட4ம் நிபீட்3ய" இத்யாதி3களில் பூர்வோக்தரீத்யா பிராட்டிக்கு உபாயதயா வரணமில்லாமை யாலும், "ஸீதாமுவாச" என்கிறவித்தை உபாயதயா வரணம் என்னில், புருஷகாரதயா வரணம் அத்4யாஹரித் துக்கொள்ளவேண்டிவருகையாலும், இத்தைப் புருஷ காரதயா வரணம் என்னில், உபாயதயா வரணம் அத்4 யாஹரிக்கவேண்டிவருகையாலும், உப4யாப்4யுபேதமான புருஷகாரத்வமே பிராட்டிக்கு ப்ராமாணிகமாகையாலும். புருஷகாரதயா வரணமே "ஸீதாமுவாச" "ஸீதாஸமக்ஷம்" என்கிறவிடத்தில் விவக்ஷிதம். ஆகவித்தால் சொல்லிற் றுய்த்து—லக்ஷ்மீ விஶிஷ்டமாய், கு3ணவிஶிஷ்டமாய், விக்3ரஹ விஶிஷ்டமான வஸ்து உபாயம் என்னுமிடத்தில் யாதொரு படி வாத்ஸல்யாதி3 கு3ணங்கள், உபாய கார்யமான அநிஷ்டநிவ்ருத்த்யாதி3களுக்கு உறுப்பான ஜ்ஞாநஶக்த் யாதி3கள் போலன்றியே. ஆஶ்ரயணஸௌகர்யமாகிற கார்யாந்தரத்துக்கு உறுப்பாயிருக்கும். விக்3ரஹங்களும் ஶுப4ாஶ்ரயத்துக்கு உறுப்பாயிருக்கும். இக்கு3ணங்களில் தான் ஒன்றின் கார்யம் ஒன்றுக்கில்லையே. தனித்தனியே கார்யபே4த3த்தையுடைத்தாயிருக்குமாபோலே லக்ஷ்மீஸம் ப3ந்த4மும் இக்கு3ணோந்மேஷத்தைப்பண்ணிக் கார்யம் செய்வித்துக் கொடுக்கையாகிற புருஷகாரத்வமாகிற கார் யத்திலே உபயுக்தமாயிருக்கும் என்றதாயிற்று. "ஸ்ரீரஸ் ஸ்ரியா க4டிகயா த்வது3பாயப4ாவே. ப்ராப்யே த்வயி ஸ்வயம் உபேயதயா ஸ்பு2ரந்த்யா" என்று ப்ரதிவாதி3 ப4யங்கரம் அண்ணாவும் அருளிச்செய்தாரிறே. மற்றை பிராட்டிமார்க் கும் ஸூரிகள் முதலான ததீ3யர்க்கும் இவள் ஸம்ப3ந்த4 மடியாக வருகிற புருஷகாரத்வமேயுள்ளது. இவளைப் போலே ஸ்வதஸ்ஸித்3த4மன்றே. ஆகையிறே "ஏதத்



ஸாபேக்ஷ ஸம்ப3ந்த4ாத் அந்யேஷாமமலாத்மநாம். சேதவீ ஸூரிகு3ருணாம் ச க4டகத்வம் ந து ஸ்வத:॥" என்று தீ3பஸங்க்3ரஹத்திலே ஜீயரருளிச் செய்தது. ஆகப் புருஷ காரத்வம் பிராட்டிக்கு அஸாத4ாரணம் என்றதாய்த்து. ஆனால் பரதந்த்ரவஸ்துவுக்கு ஸமப்ரத4ாநக்ருத்யமான புருஷகாரத்வம் விருத்3த4மன்றோ என்னில். ஸ்வதந்த்ரனான ஈஶ்வரன் தன்னுடைய நிருபாதி4க ஸௌஹார்த்த3த்தாலே அத்3வேஷாதி3 ஸமஸ்தாத்ம கு3ணங்களையும் ஆசார்ய ஸமாஶ்ரயணத்தையும் உண்டாக்கி, தத்3த்3வாரா ப்ராப்ய வைலக்ஷண்ய ஜ்ஞாநத்தையும் பிறப்பித்து ஸம்ஸார தோ3ஷத்தையும் ப்ரகாஶிப்பித்து புருஷகார பூர்வகமாக ஆஶ்ரயிக்கவேணுமென்கிற ஸங்கல்பாநுரூபமாக ஆஶ்ரயிப் பிக்கிறானாகையாலே, அவனுடைய ஹ்ருத3யாநுத4ாவநம் பண்ணிப் புருஷீகரித்து ஶேஷியான ஈஶ்வரனுக்கு ஶேஷ ப்ரத3ாநம்பண்ணி அவன் இவர்களையும் ரக்ஷித்துத் தானும் உளனும்படி அவன் ஸ்வரூபரூபகு3ணாதி3களுக்கு அதிஶயமுண்டாக்குகிறாளாகையாலே ஶேஷத்வ பார தந்த்ர்யங்களுடைய கார்யமித்தனையல்லது அவற்றுக்கு விருத்3த4மன்று. ஆனாலும் அந்யாதீ4நாதிஶயம் ஸ்வதந்த்ர வஸ்துவுக்கு அநுரூபமன்றேயென்னில்:—ஸ்வரூபாந்தர்க3தை யாய்க் கொண்டே இவளுக்கு வஸ்துத்வமாகையாலே. அந் யத்வமில்லாமையாலே ஸ்வாதீ4ந விப4வமேயாகக் கடவது. ஆகையாலே அநுரூபமாயிருக்கும். "ஸ்வதஶ் ஸ்ரீஸ்த்வம் விஷ்ணோ: ஸ்வமஸி" "ப்ரஸூநம் புஷ்யந்தீமபி பரி மளர்த்3தி4ம்" என்று இவ்வர்த்த3 விஶேஷங்களை பட்டர் அருளிச்செய்தாரிறே. இவள் அபராத4ங்களைப் பொறுப்பித் துச் சேரவிட நாம் கைக்கொள்ளக் கடவோம் என்கிற ஈஶ்வர ஸங்கல்பத்தாலும் இவள் புருஷகாரமாகக் குறை யில்லை. இவையித்தனையும் திருவுள்ளம்பற்றி அருளிச் செய்கிறார் (மூனறு) இத்யாதி3. ப4ர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே யிருக்கும் மாதாவைப்போலே புருஷகாரபூ4தையான இவ

a 'நங்கள் திரு' b 'உன் திரு' என்னலாம்படி இரண்டிடத்திலும் விடவொண்ணுத ப$_3$ந்த$_4$முண்டு. c 'செல்வர் பெரியர்' d 'அவனெவ்விடத்தான் யானுர்' e 'செய்வினேயோ பெரிதால்' என்று அவன் பெருமையையும் தங்கள் தண்மையையும் அபராத$_4$த்தின் கனத்தையும் நினேத்து அஞ்சினவர்கள் f 'இலக்குமனேடு மைதிலியும்' என்னும்படி தன்னேடு ஒரு கோர்வையான இளேயபெருமாளோபாதி g கீழ்மகன், மற்றேர் சாதி, h சிறுகாக்கை, i 'புன்மையாளன், j 'அடியார்' என்று தண்மை பாராமல் நாடும் காடும் மேடும் கல்லும் கடலும் ஒருவெளுப்பாம்படி k 'பங்கயத்தாள் திருவருள்' என்கிற தன்னுடைய காருண்யவர்ஷத்தைச் சொல்லுகிற l மழைக்கண்களேயுடைய m பார்வண்ணமட மங்கையாய், அஶரண்ய ஶரண்யையான இவளே நமக்குப் புகலென்று புகுந்து கைங்கர்யப்ராப்தியுபாயத்தில் அபேக்ஷைகள் தோற்ற விண்ணப்பம் செய்யும் வார்த்தைகளேக் கேட்டு 'அஸ்து தே' என்று தொடங்கி இவர்கள்

ளுக்கும் உண்டான அகார மகாரார்த்த$_2$ஸ$_4$க ஜீவேஶ்வர ஸம்ப$_3$ந்த$_4$த்தை ஸப்ரமாணமாக அருளிச்செய்கிருர் (நங்கள் திரு உன்திரு) என்று. வ்யுத்பத்தி த்$_3$வயத்தாலுமுண்டான அர்த்த$_2$த்தை "யஸ்யா: கடாக்ஷணம் அநுக்ஷணம்" இத்யாதி$_3$யாலே ஆழ்வான் அருளிச்செய்தார். பெரிய பிராட்டியார்க்குண்டான "கமலா" என்னும் திருநாமம் இவ்வர்த்தத்தை வலியுறுத்தும். "கஶ்ச மஶ்ச கமேள। தௌ லாதீதி கமலா" என்றிறே வ்யுத்பத்தி. ஆக இவளுக்குண்டான உப$_4$யஸம்ப$_3$ந்த$_4$ம் சொன்னபடி. ஸம்ஸாரி ஜீவாத்மாக்களினுடைய அநாதி$_3$கால ப்ரவ்ருத்த விபரீதாசாரங்களேயும், நிரங்குஶஸ்வதந்த்ரனை ஈஶ்வரனுடைய த$_3$ண்ட$_3$த$_4$ரத்வத்தையும், நித்யாநபாயிநியான பிராட்டியுடைய புருஷகார க்ருத்யத்தையும் அருளிச்செயல் சந்தைகளேக்கொண்டு தொகுத்தருளிச்செய்கிருர் (செல்வர் பெரியர்) என்று தொடங்கி.

a இர-திருவ 56 b திருவாய் 10-10-2 c நாச்-திரு 10-10 d திருவாய் 5-1-7 e திருவாய் 4-7-1 f பெரியதிரு 2-3-7 g பெரியதிரு 5-8-1,2 h பெரியாழ்திரு3-10-6 i பெரியதிரு10-2-8 j பெரியாழ்-திரு 4-9-2 k திருவாய் 9-2-1 l திருவிருத்தம் 52 m பெரியதிரு 2-6-2



வினேகள் தீர்த்துத் a தூவி சேரன்னமான தன் சிறகிலே இட்டுக்கொண்டு, ஈஶ்வரன் இத்தலேயில் பிழைகளே நினேத்து b எரிபொங்கி c அழல விழித்துச் d சலம்புரிந்து அங்கு அருளின்றிக்கே சீறிக்கலங்கினவளவிலே e நன்னெஞ்சவன்னமானமை தோற்றக் கால்வாங்கிக் கடக்க நின்று இரண்டு தலேயும் பட்டதுபட, நங்கோலரை(ற?)யான குடியிருப்பை முதல் திருத்தவேணுமென்று பார்த்து ஹிரண்யவர்ணேயான தன்னுடைய f பான்மொழிகளாலே ப்ரியஹிதங்கள் குலேயாதபடி இடமற வார்த்தை சொல்லி ஆறவிட்டு g வடிக்கோலவாள் நெடுங்கண்களாலே தேற்றி h 'திருமகட்கே தீர்ந்தவாறு' என்னும்படி திருவுள்ளம் மாருடினவளவிலே, ஓடமேற்றிக் கூலி கொள்வாரைப்போலே அபராத$_4$ங்களேப் பொறுப்பித்துப் i பொன்பாவையானமை தோற்றும்படி விளக்குப் பொன்போலே இரண்டு தலேயையும் பொருந்தவிட்டு j 'நமக்கும் பூவின் மிசை நங்கைக்குமின்பன்' என்னும்படி ஏகரஸமாக்கிப் பின்பு அந்த:புரத்தில் ஆளாய்நின்று k 'இரந்துரைப்பதுண்டு', l வேறே கூறுவதுண்டு', m 'நின்று கேட்டருளாய்', n போற்றும் பொருள் கேளாய் என்று இவன் விண்ணப்பம் செய்யும் வார்த்தைகளே o 'திருமங்கை தங்கிய p என்திருமார்வற்கு q ஒருவாய் சொல் r 'என்வாய் மாற்றம் என்னும்படி சேரவிருந்து திருச்செவிசாத்துகையாலே, 'ஶ்ருணேதி' 'ஶ்ராவயதி' என்கிறவிரண்டாலும் புருஷகாரமான இவளுடைய

(ஶ்ருணேதி ஶ்ராவயதி என்கிற இரண்டாலும்) இத்யாதி$_3$—"ஶ்ருணேதி ஶ்ராவயதி" என்கிற வ்யுத்பத்திகளில் "ஸாபராத$_4$ரான அடியோங்களே ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே காட்டிக் கொடுத்தருளவேணும்" என்று இப்புடைகளிலே ஆஶ்ரிதருடைய ஆர்த்தத்$_4$வநியைக் கேட்டு ஸர்வேஶ்வரனுக்கு விண்ணப்பம்செய்து இவர்களுடைய ஆர்த்தியை ஶமிப்பிக்குமென்றதாம். (ஶ்ருணேதி) என்றது கேளாநிற்கும் என்றபடி. (ஶ்ராவயதி) என்றது கேட்பியாநிற்குமென்றபடி.

a பெரியதிரு 3-7-9 b நானதிருவ 21 c பெரியாழ்திரு 1-8-5 d திருநெடு 6 e பெரியதிரு 7-2-7 f பெரியாழ்திரு 3-10-5 g இர-திருவ82 h முதல்திருவ 42 i நான்திருவ 59 j திருவாய் 4-5-8 k திருச்சந்த 101 l பெரியதிரு6-3-7 m திருவிரு1 n திருப்பாவை29 o நாச்-திரு 8-4 p திருவாய் 6-8-10 q திருவாய் 1-4-7 r திருவாய் 9-7-6

புருஷகாரபா4வத்துக்கு ஏகாந்தமாக இவளுக்குச் சொன்ன உப4யஸம்ப3ந்த4த்துக்குமுண்டான ப்ரயோஜன விஶேஷத்தைச் சொல்லுகிறது: "ஶ்ருணோதீதி ஸ்ரீ:" "ஶ்ராவயதீதி ஸ்ரீ:" என்கிற நிருக்தம். "ஶ்ருணோதி" என்று கேட்குமென்கையாலே, சேதநரோடுண்டான ப3ந்த4கார்யத்தைச் சொல்லுகிறது. "ஶ்ராவயதி" என்று, கேட்பியாநிற்குமென்கையாலே ஈஶ்வரனோடுண்டான ப3ந்த4கார்யத்தைச் சொல்லுகிறது.

அதாவது:— இவன் "ஈஶ்வரதத்வமில்லை" என்று எழுத்திடுமன்றும், இவன் உருமாயாதபடி இராமடமூட்டுவாரோபாதி, கண் காணுமல் நோக்கிப் போருவது; கரணகளேப3ரவிது4ரமாய் அசித்கல்பமாய்க் கிடக்க, அபேக்ஷாநிரபேக்ஷமாகவே த3யமாநமநாவாய்க்கொண்டு கரணகளேப3ரங்களைக்கொடுப்பது: பின்பு, இவற்றுக்கு ப்ரவ்ருத்திநிவ்ருத்தி ஶக்தியுண்டாகைக்காக அநுப்ரவேஶிப்பது; பின்பு, அஸுரராக்ஷஸாதி3கள் காலிலே துகையுண்ணும்போது, "நாட்டில் பிறந்து படாதன பட்டு" ராமக்ருஷ்ணாதி3ரூபேண மார்பிலே அம்பேற்று, எதிரிகளை இடறிக்கொடுப்பது; "நம்மைப் பெறுகைக்கீடாயிருப்பதொரு அறிவுண்டாமோ" என்னும் நோயாசையாலே, வேத3ங்களையும், வைதி3கரையும், ப்ரவர்த்திப்பித்து, இவை படுகிற நோவைக் கண்டு, இவர்களிலும் "*ப்4ருஶம் ப4வதி து3:கி2த:*" என்று திருவுள்ளம் மிகவும் உடைகுலைப்படுவது; ஸாத4னங்களாகக் கொடுத்த கரணகளேப3ரங்களே பா3த4கங்களானல், அவற்றைக்கொண்டு அத4:பதியாமைக்காக, அவற்றை ஒடித்திட்டுவைப்பது; பின்பு, "*ஸ ஏகாகீ ந ரமேத*" என்று நித்யவிபூ4தியுக்தனை தான் இவற்றையொழியச் செல்லாமை உடம்பு வெளுப்பதாம்படியான நிருபாதி4கப3ந்த4மும், "*ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே*" என்கிறபடியே, இவை படுகிற நோவு பொறுக்கமாட்டாமையாலே "நாம் இழிந்து நோக்குகைக்குச் சிறிது இடம் பண்ணித் தருவது காண்!" என்று அவஸரப்ரதீக்ஷணுவது; "*அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:*" என்று "நான் அழிந்தேயாகிலும் ஆஶ்ரிதரை ரக்ஷிக்கக்கடவேன்" என்பதும், "*தோ3ஷோ யத்3யபி தஸ்ய ஸ்யாத் — ந த்யஜேயம் கத2ஞ்சந*" "*ஸமோஹம் ஸர்வபூ4தேஷு*" என்னும் ஸ்வபா4வவிஶேஷமும்: ஏவமாதி3களுடைய ஆஶ்ரயணீயனை ஸர்வேஶ்வரன் பக்கலிலே



ஸமவேதமாயிராநிற்கச் செய்தேயும், அப்படிப்பட்டிருக்கிற அவனுடைய வாத்ஸல்யஶீதளமான திருவுள்ளத்தை, "*க்ரோத4மாஹாரயத் தீவ்ரம்*" என்கிறபடியே க்ரோத4த்துக்கு இரையாக்கிக் கடல் கொதித்தாப்போலே கொதிக்கும்படி பண்ணுவது; "*ப்ரியம்வத3:*" என்கிறபடியே ம்ருதஸஞ்ஜீவிநியான வாக3ம்ருதத்தை "*க்ஷிபாமி*" "*ந க்ஷமாமி*" "*ஹந்யாம்*" என்கிறபடியே, விஷதா4ரை போலே ஶ்ரவணகடுகமாம்படி பண்ணுவது; ஸர்வோஜ்ஜீவநஹேதுவான அவனுடைய தி3வ்யவ்யாபாரங்களை நரகாதி3களிலே தள்ளிக் குட்டிக்கொலையாக நிறுத்தறுத்துத் தீர்த்துகையிலே அதி4க்ருதமாம்படியும், அநாதி3காலம் பண்ணிப்போருகிற ப4க3வத3பசாரபா4க3வதாபசாராஸஹ்யாபசார நாநாவித4ாநந்தாபசாராநுஸந்தா4நத்தாலே குடல் கரிந்து அநாதி3காலம் கர்மங்களை நிறுத்தறுத்துத் தீர்த்துப்போருகிற அவனை ஆஶ்ரயிக்கப் புகுகிறது; "அவன் உதிரக்கை கழுவாதபடி பண்ணிப்போந்த நான் ஆஶ்ரயிக்கப் புகுகிறேன்; அதுக்குக் கைதொடுமான கர்மம் இலச்சினைப்படியே குறியழியாமல் கிடக்கிறது." என்கிற ப4யாதிஶயத்தாலே தேங்கி, ஸம்ஸாரத்தில் வெம்மையும், ப4க3வத்3விஷயத்தில் வைலக்ஷண்யமும் வடிம்பிடுகையாலே, பண்டு போலே ஆஶ்ரயணவிமுக2னுகமாட்டாதே, து3ஷ்கரத்வாதி3களாலே ஸாத4நாந்தரங்களில் காலிடக்கூசி, புறம்பே போக்கடியற்றுத் தெகிடாடுகிற இச்சேதநன் 'ஈஶ்வரன் திருவுள்ளத்தில் நடையாடுகிற அழல் தீயை ஆற்றி, நம்மைச் சேரவிடுகைக்கு நம்மோடும் அவனோடும் நிருபாதி4கஸம்ப3ந்த4த்தை உடையளாய், "*ந கஶ்சிந் நாபராத்4யதி*" என்னுமிவளையொழியப் புகுவாசலில்லை' என்று காகவ்ருத்தாந்தாதி3முக2த்தாலே அறுதியிட்டு, "*ப்ரணிபாதப்ரஸந்நா ஹி மைதி2லீ ஜநகாத்மஜா*" என்று புருஷகாரநிரபேக்ஷமாக அஞ்ஜலிமாத்ரஸுலபை4யான இவளை வந்து கிட்டி, "*மாதர் மைதி2லி ராக்ஷஸீஸ் த்வயி ததை3வார்த்3ராபராத4ாஸ் த்வயா, ரக்ஷந்த்யா பவநாத்மஜால்லகு4தரா ராமஸ்ய கோ3ஷ்டீ2 க்ருதா*" என்கிறபடியே, "புறம்புள்ள பொருத்தமடைய அற்று, ஈஶ்வரனுக்காளாகாதபடி, பூர்வாபராத4த்தாலே அஞ்சின எனக்கு நிருபாதி4கஜநநியான தேவரீர் திருவடிகளொழியப் புகலில்லை; இனி நான் ஈஶ்வரனுடைய இரக்கத்துக்கு இரையாய் ரக்ஷிதனுதல்; அவனுக்கு ஸ்வாதந்த்ர்ய

பாத்ரமாய் நாஶத்தோடே தலைக்கட்டுதலொழிய இளைப்பாறுகைக் கிடமில்லாதபடி அநந்யக3தி; இனி, அடியேனுக்கு ஹிதமின்ன தென்றறிந்து ரக்ஷித்தருளுகை தேவரீருக்கே ப4ரம்.'' என்று இவன் சொன்ன வார்த்தையைக் கேட்கையும்;

அதுக்கு மேலே வெந்நீருக்குக் குளிர் நீர் போலே நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யத்தாலே *'' அபி4த: பாவகோபமம் ''* என்கிறபடியே அநபி4ப4வநீயனான ஈஶ்வரனைத் தன்னுடைய போ4க்3யதாதிஶயத் தாலே பத3மாக்கி ''நாயன்தே ! இச்சேதநனை அங்கீ3கரித்தருளீர்'' என்னும்; '' ஆவதென்; *' ஶ்ருதிஸ்ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா '* என்று நம்முடைய ஆஜ்ஞாரூபமான ஶாஸ்த்ரமர்யாதை3யை அதிலங்கி4த்து நம் நெஞ்சு புண்படும்படி தீரக்கழிய அபராத4ம் பண்ணிப்போந் தவனல்லனோ ? இவனை அங்கீ3கரிக்கைபாவதென் ? '' என்னும் ஈஶ்வரன் ; '' அவனுடைய பூர்வாபராத4ங்களை உம்முடைய பொறைக்கிலக்காக்கி ரக்ஷித்தருளீர் '' என்னும் பிராட்டி : '' பொறையை நோக்குகைக்காக ஶாஸ்த்ரமர்யாதை3யைக் குடநீர் வழியவோ? '' என்னும் ஈஶ்வரன் ; '' ஶாஸ்த்ரமர்யாதை3யை நோக்குகைக்காக உம்முடைய ஸ்வாப4ாவிகமான க்ஷமாதத்வத் தைக் குடநீர் வழியவோ? '' என்னும் பிராட்டி ; '' க்ஷமையை நோக்கில், ஶாஸ்த்ரமர்யாதை3 குலையும் ; ஶாஸ்த்ரமர்யாதை3யை நோக்கில் க்ஷமாதத்வம் குலையும் : இரண்டும் குலையாதொழிய வேண்டும் ; செய்யவடுப்பதென்? '' என்னும் ஈஶ்வரன்; ''கிங்கர்த்த வ்யதாகுலனாயிருந்தால் அத்தனையே ; அவை இரண்டும் குலையாத படி வழி சொல்லுகிறேன் ; அப்படியே செய்தருளீர்.'' என்னும் பிராட்டி ; '' இரண்டும் குலையாமல் இச்சேதநனை நோக்க வழி யுண்டாகில் நமக்குப் பொல்லாதோ ? சொல்லிக்காண் '' என்னும் ஈஶ்வரன் ; '' ஆனல், ஶாஸ்த்ரமர்யாதை3யை விமுக2ர் விஷய மாக்குவது ; உம்முடைய க்ஷமையை அபி4முக2விஷயமாக்குவது ; இரண்டும் ஜீவித்ததாயறும் '' என்னும் விஷயவிப4ாக3ம் பண்ணிக் கொடுக்கும் பிராட்டி; அத்தைக்கேட்டு '' அழகிய விப4ாக3ம் ! '' என்று இச்சேதநனை அங்கீ3கரித்தருளும் ஈஶ்வரன் ; ஆக, இப்படி ஸாபராத4ஜந்துவை ஈஶ்வரன் அங்கீ3கரித்தருளும்படியான வார்த்தைகளைக் கேட்பித்தருளுகையும்.

ஆக, புருஷகாரத்வஸமர்ப்பகமான ஸ்வப4ாவவிஶேஷங்களும் தத்கார்யங்களும் த4ர்மிக்3ராஹகமான ஸ்ரீ ஶப்3த3த்தாலே சொல்லிற்றாயிற்று.



செயல்களைச் சொல்லுகிறது. a 'செய்தகவினுக்கில்லை கைம் மாறு' என்று இரண்டு தலைக்கும் தலைதடுமாறாக உபகரித்துத் தன் சொல்வழி போகவேண்டும்படியான திருவடியோடே மறு தலைக்குமவள். b தான்முயங்கும்படியான போ4க்3யதைக்குத் தோற்று எத்தைச் செய்வோமென்று தலைதடுமாறி c 'நின்னன் பின்வழி நின்று', d 'அதனின் பின்னே படர்ந்தான்' என்னும் படி விளைவதறியாதே முறுவலுக்குத் தோற்றுத் தன் சொல்வழி வருமவனைப் பொறுக்குமென்னுமிடம் சொல்லவேண்டாவிறே.

---

*இப்படிப் புருஷகார க்ருத்யத்தைச் சொல்லுகிற இதுக் கும் புருஷகார ப4ாவத்திலே நோக்கு. '' மத்பத3ந்3வந்த்3வ மேகம் யே ப்ரபத்3யந்தே பராயணம் । உத்3த4ரிஷ்யாம் யஹம் தே3வி ஸம்ஸாராத் ஸ்வயமேவ தாந் ॥ '' '' ஆந்ருஶம் ஸ்யம் பரோ த4ர்ம: '' இத்யாதி3களை அவன்பக்கலிலே கேட்டு, கபோதத்தைக் கபோதி கேட்பித்தாப்போலே அவஸரத்திலே கேட்பிக்கும் என்னவுமாம். ஸர்வேஶ்வரன பக்கலிலே லோகஹிதத்தைக்கேட்டு '' மித்ரமௌபயிகம் கர்த்தும் '' இத்யாதி3களிற்படியே விபரீதரையும் கூடக் கேட்பிக்கும் என்னவுமாம். விமுக2ாநாமபி ப4க3வத3ாஶ்ரயண ஶ்ராவயித்ருத்வம் புருஷகாரப4ாவாநுப்ரவிஷ்டமிறே. எல் லாம் செய்தாலும் நிரங்குஶஸ்வதந்த்ரனான ஈஶ்வரன் சேதந ருடைய அபராத4ங்களை நிறுத்து அறுத்துத் தீர்த்துவன் என்று நிற்குமளவில், இவளாலே பொறுப்பிக்கப் போமோ? என்ன அருளிச்செய்கிறார் ( செய்தகவினுக்கு ) இத்யாதி3— ( சொல்லவேண்டாவிறே ) இத்யந்தம். '' திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன் சொல்வழி வருமவனைப் பொறுப் பிக்கச் சொல்ல வேண்டாவிறே '' என்றருளிச் செய்தாரிறே பிள்ளைலோகாசார்யரும். ஆக ஸ்ரீமத்பத3த்தில் ப்ரக்ருத யம்ஶத்தை அருளிச்செய்தாராயிற்று.*

---

a பெரியதிரு 5-8-2 b மூன்-திருவ 100 c பெரியாழ்திரு 3-10-7
d பெரியதிரு 2-5-6

## மதுபர்த்தம்

மதுப்— இவனுமவளுமான சேர்த்தி எப்போதுமுண்டென்கிறது.

---

இனி ஸ்ரீமத் பதத்தில் ப்ரத்யயாம்ஶத்தை அருளிச்செய்கிறார் (மதுப்) என்று தொடங்கி. மதுப்புத்தான் "பூம நிந்தா ப்ரஶம்ஸாஸு நித்யயோகேऽதிஶாயநே। ஸம்ஸர்கேऽஸ்திவிவக்ஷாயாம் பவந்தி மதுபாதய:॥" என்று. "தநவாந்" "மஹதிகம் கௌஶலம் ஆயுஷ்மதாம்" "புத்திமாந்" "ப்ரபாவாந்" "வீர்யவாந்" "ஸ்படிகோ ரக்திமவாந்" "பர்வதோ வஹ்நிமாந்" இத்யாதிகளில் அநேகார்த்தங்களில் ப்ரஸித்தமிறே; அவற்றில் இங்கு விவக்ஷிதார்த்தம் எது என்னில்:— "லக்ஷ்மீம் அநபகாமிநீம்" "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா" "தஸ்யாநபாயிநீ ஶக்தி: தேவீ தத்தர்ம தர்மிணீ" "மம ஸர்வாத்ம பூதஸ்ய நித்யைவைஷாநபாயிநீ" "நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோஶ்ஶ்ரீரநபாயிநீ" "அப்ருதக்சாரிணீ ஸத்தா மஹாநந்தமயீ பரா" இத்யாதி ப்ரமாணாந்தர ஸித்த நித்யயோகே மதுப்பாகிறது. இத்தால் புருஷகாரபூதையான பிராட்டியும் ஈஸ்வரனுமான இருவருடைய சேர்த்தியும் எப்போதுமுண்டு என்றபடி. "பூம நிந்தா ப்ரஶம்ஸாஸு" என்று அநேகார்த்தமாயிருந்ததேயாகிலும் இங்கு மதுப் உபயோகவிஶேஷத்தாலே ப்ரமாண ஸித்தமான நித்யயோகத்தைச் சொல்லுகிறது. விக்ரஹத்தில் ப்ரஹ்மசர்யாவஸ்தையிலுங்கூட "க்ருஷ்ணாஜிநேந ஸம்வ்ருண்வந் வதாம் வக்ஷ:ஸ்தலாலயாம்" என்னும்படியிறே நித்யயோகமிருப்பது. அப்ருதக்ஸித்த வஸ்துவுக்கு "ஸ்ரீமாந்" என்று மத்வர்த்தீய ப்ரத்யய ஸாபேக்ஷமாக ஸாமாநாதிகரண்யம் கூடுமோ? என்றும், ப்ருதக்ஸித்தமாகில் "கீர்த்தி: ஸ்ரீ: வாக் ச நாரீணாம்" என்றும் "பூவில் வாழ் மகளாய்" என்றும் மத்வர்த்தீய



ப்ரத்யய நிரபேக்ஷமாக ஸாமாநாதிகரண்யம் கூடுமோ என்றும் சிலர் சொல்லும் சோத்யங்கள் இரண்டும் மந்தங்கள். எங்ஙனேயென்னில்:— "தத்குணஸாரத்வாத் து தத்வ்யபதேஶ: ப்ராஜ்ஞவத்" என்கிற ந்யாயத்தாலே ஜ்ஞாநகுணத்தையிட்டு ஆத்மாவை ஜ்ஞாநமென்று சொல்லாநிற்கச் செய்தே, "ஜ்ஞாநவாந்" என்று மத்வர்த்தீயப்ரத்யயாந்விதமாகவும் ஸாமாநாதிகரண்யம் உண்டாகிறாப்போலே இங்கும் குறையில்லை. ஆகையால் மத்வர்த்தீயப்ரத்யயமாத்ரத்தைக்கொண்டு ப்ருதக்ஸித்தமென்று நிஶ்சயிக்கப் போகாது. "நரபதிரேவ ஸர்வே லோகா:" இத்யாதிகளிற்போலே விவக்ஷாந்தரம் ஸம்பாவிதமான விடத்தில் இப்ரத்யயமில்லாத ஸாமாநாதிகரண்ய மாத்ரத்தைக்கொண்டு ப்ருதக் ஸித்தமன்று என்னவொண்ணாது. ஆன பின்பு, விஶதமாக ப்ரதிபாதிக்கும் ப்ரமாணாந்தரங்களைக்கொண்டு இவ்வஸ்துஸ்திதியிருக்கும்படி தெளியப்ராப்தம். இங்கு உபாயதஶையிலும் பலதஶையிலும் ப்ரமாணங்கள் நித்யயோகத்தைச் சொல்லுகையாலும், இம்மந்த்ரத்தில் இவ்வர்த்தம் ப்ரகாஶிப்பிக்கை அபேக்ஷிதமாகையாலும், பூர்வோத்தரகண்டங்களில் மதுப்பாலே "ஸ ப்ராது: சரணௌ காடம்" "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா" என்கிறபடியே பிரிவற்றபடி சொல்லிற்றாயிற்று. நம்மாழ்வாரும் "அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா" என்றும், "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப" என்றும், "இங்குமங்கும் திருமாலன்றியின்மை கண்டு" என்றும் உபாயதஶையிலும் பலதஶையிலும் ஸ்ரீமச்சப்தத்திற்சொன்ன நித்யயோகத்தை அநுஸந்தித்தார். இவ்வநுஸந்தாநம் ஸாபராதர்க்கு அணியிடாதே, நினைத்தபோதே ஆஶ்ரயிக்கைக்குறுப்பாம். "ஆஶ்ரயணவேளையோடு போகவேளையோடு வாசியற ஒரு மிதுநமே உத்தேஶ்யம்" என்றிறே நம்பிள்ளை ஈட்டிலே திவ்யஸூக்தியிருப்பது. "ஶ்ரிய:பதி: நிகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாந: ஸ்வேதர ஸமஸ்த

வஸ்து விலக்ஷணாநந்த ஜ்ஞாநாநந்தைக3 ஸ்வரூப:'' என்று ஸ்வரூபநிரூபகமான ஜ்ஞாநாநந்த3ாதி3களுக்கு முன்னே ஸ்ரிய:பதித்வத்தைச் சொல்லும்படி அவன் ஸ்வரூபத்துக்கு ப்ரக்3ரு நிரூபகையாயிருக்கையாலே இவளோடே கூடியே வஸ்துவினுடைய ஸத்3ப4ாவம் இருப்பது என்றபடி. ஆக இந்த்ய யோக3ம் ஸ்வரூபாநுப3ந்தி4த்வ ப்ரயுக்தம் என்றதாயிற்று.

இப்படி, புருஷகாரபூ4தையாயற்றாலும் இவள் அஸந்நிஹிதையாயிருக்குமாகில், ''சஞ்சலம் ஹி மந:'' ''சலசித்தம்'' ''நின்றவா நில்லா நெஞ்சு'' என்கிறபடியே, சூறுவழிக்காற்றுப் போலே சுழன்று வருகிற இஸ்ஸம்ஸாரி சேதநருடைய நெஞ்சு தளமாக அங்குரித்த ருசியாகையாலே, க்ஷணப4ங்கு3ரையாயிருக்குமாகையாலே, அது தீவதற்கு முன்னே ஈஸ்வரனை ஆஸ்ரயிக்கைக்கு விரகற்றுப் பழைய குருடே ஆய்விடும் என்கிற ஸங்கையிலே, ருசி பிறந்தபோதே ஆஸ்ரயிக்கலாம்படி ஆஸ்ரயணீயவஸ்துவோடே இவள் நித்யஸம்யுக்தையாய் இருக்கும் என்கிறது—மதுப்பு.

இம்மதுப்பு, '*நித்யயோகே3 மதுப்*' ஆகையாலே இவள் நித்யாநபாயிநியாய் இருக்குமென்கிறது. அதுக்கு ஹேது என்னென்னில்: ஜ்ஞாநாநந்த3லக்ஷணமான ப4க3வத்ஸ்வரூபத்துக்கு ஜ்ஞாநாநந்த3லக்ஷணமான ஆத்மஸ்வரூபத்திற்காட்டில் வ்யாவர்த்தகமான ஹேயப்ரத்யநீகத்வ விபு4த்வ ஸேஷித்வாதி3களோபாதி, ஸ்ரிய:பதித்வமும், ம்ருது3பாத3ாநகமான க4டகரகாதி3களில் ப்ருது2பு3த்4நோத3ராகாரருடையயான க4டத்வஜாதி க4டத்துக்குக் கரகாதிவ்யாவ்ருத்தியைப் பண்ணுகிறவோபாதி, வ்யாவ்ருத்தியைப் பண்ணித்தரும்படி ஸ்வரூபநிரூபகபூ4தையாகையாலும், ஸ்வாப4ாவிகமாகவும் ஔபாதி4கமாகவும் ப4க3வத்ஸாரூப்யம் பெற்றிருக்கிற நித்யருடையவும் முக்தருடையவும் விக்3ரஹங்களிற்காட்டில் வ்யாவ்ருத்தமாம்படி, ''*ஸ்ரீவத்ஸவக்ஷா:*'' என்கிறபடியே அஸாத4ாரணதி3வ்யமங்க3ளவிக்3ரஹத்துக்கு நிரூபகபூ4தையாகையாலும், ஒரு மிது2நவிஷயகிஞ்சித்காரத்தையொழியில், க்ஷணகாலமும் த4ரிக்கமாட்டாதபடியான நித்யரையும் முக்தரையும் நித்யகைங்கர்யம் கொள்ளுகைக்காக, ''*ஸ்ரியா ஸார்த்த4மாஸ்தே*'' என்கிறபடியே நிரந்தர ஸம்ஸ்லேஷம் பண்ணிக்கொண்டிருக்கையாலும்,



விப4வாதி3களிலும் வந்தால், ''*தே3வத்வே தே3வதே3ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ। விஷ்ணோர் தே3ஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ் தநும்॥*'' என்கிறபடியே அவ்வோ அவ்வோ அவதாரஸஜாதீயமான விக்3ரஹபரிக்3ரஹம் பண்ணி வந்து அவதரிக்கையாலும், அதுக்கு மேலே ''அகலகில்லேனிறையும்'' என்று மார்பிலேஇருந்து மடலெடுக்கும்படி ப4க3வத்3போ4க3த்திலே ஆழங்காற்பட்டு, ''*ஜலாந் மத்ஸ்யாவிவோத்3த்4ருதௌ*'' என்கிறபடியே க்ஷணகாலவிஸ்லேஷாஸஹையாய் இருக்கையாலும், ''*ஸ்வவைஸ்வரூப்யேண ஸதா3நுபூ4தயாப்யபூர்வவத்3 விஸ்மயமாத3தா4நயா*'' என்கிறபடியே ப4க3வத3நுப4வாவகா3ஹநம் பண்ணி நித்யமுக்தஸங்க4ங்கள் ''*ஏகதா4 ப4வதி, த்3விதா4 ப4வதி, த்ரிதா4 ப4வதி, ஸததா4 ப4வதி, ஸஹஸ்ரதா4 ப4வதி*'' என்று, அநேக ஸரீரபரிக்3ரஹம் பண்ணி நிரந்தராநுப4வம் பண்ணினாலும், ''*நிரவத்3ய: பர: ப்ராப்தே:*'' என்கிறபடியே அநுபூ4தாம்ஸம் அல்பமாய், அநுப4ாவ்யாம்ஸமே அபரிச்சி2ந்நமாம்படியான பெரிய வைப4வத்தையுடைய தானும் தன்னுடைய ஜ்ஞாநஸக்த்யாதி3களையும், ஸ்வவைஸ்வரூப்யத்தையும் சேர்ந்து ஒருகாலகலைகதே3ஸமும் மலடுபற்றுதபடி நிரந்தராநுப4வம் பண்ணாநின்றாலும், ஆனைக்குக் குதிரை வைத்து அந்த வைஸ்வரூப்யாநுப4வமடைய, போ4கே3ா போ4த்3க4ாதுகேளீசுளகிதமாம்படி பண்ணவற்றான அவளுடைய நிரவதி4கபோ4க்3யதாதிஸயத்தாலே மார்பிலே இருந்து மடலெடுக்கும்படி க்ஷணகாலமும் விரஹாஸஹனாகையாலும், இவள் நித்யஸம்யுக்தையாயிருக்கும்.

''*ஸ்ரீயதே*'' என்கிற வ்யுத்பத்தியாலே த்ரிவித4ாத்மவர்க்க3த்திற்காட்டில் வ்யாவ்ருத்தி சொல்லிற்று. மதுப்பாலே அல்லாத நாச்சிமாரிற்காட்டில் வ்யாவ்ருத்தி சொல்லிற்று. அல்லாதவர்களுக்கு நித்யஸம்யோக3ஹேதுபூ4தங்களான ஸ்வரூபநிரூபகத்வாதி3கள் இல்லையே. ஆக, இவள் சொன்னதொன்றை மேல் விழுந்து கேட்கும்படியான இவனோடுண்டான நிருபாதி4கப3ந்த4த்தாலு, நித்யாநபாயிநியாய் நின்று, ''அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்கும்'' என்னும்படி பண்ணும் தன்னுடைய வால்லப்4யாதிஸயத்தாலும் நிருத்தரமாம்படியான தன்னுடைய உக்திவிஸேஷங்களாலும், அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தை ஆற்றிச் சேரவிட க்ஷமையாகையாலும், புருஷகாரப4ாவம் சொல்லிற்றாயிற்று.

ஒருவரை ஒருவர் பிரிந்தபோது நீரைப்பிரிந்த மீனும் தாமரையும்போலே ஸத்தையழிவது முகம்வாடுவதாகையாலே அவனுமிவளோடு a அன்பளவி, இவளும் b செவ்விப்படிக் கோலம் c அகலகில்லேனென்றிருக்கையாலே d என்றும் திருவிருந்தமார்வன் சிரீதரன்' என்னும்படி நித்யயோக3ம் குலே

உப4யவிபூ4திநாத2னான ஈஶ்வரனுக்கு * நலமந்தமில்ல தோர் நாடான நித்யவிபூ4தியிலே அயர்வறுமமரர்களுடைய நிரந்தரானுப4வஜநித ஹர்ஷப்ரகர்ஷ ப2லாத்காரகாரிதமான நித்யகைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்ப3ந்தி4யாய்க்கொண்டு அவர்களோட்டை அநுப4வம் நடவாநிற்கச்செய்தே, 'நலிந்த் தான் காத்து அளிக்கும் பொழிலேழும்" என்கிறபடியே லீலாவிபூ4தியில் ரக்ஷணம் குலையாமல் நடத்திக்கொண்டு போகிறாப்போலே, இவளும் மாத்ருத்வரூபேணவும் மஹிஷீத்வரூபேணவும் சேதநரோடும் ஈஶ்வரனோடும் அவர்ஜநீய ஸம்ப3ந்த4முடையவளாகையாலே அவனோட்டையநுப4வம் நடவாநிற்கச் செய்தேயும் ஜக3த்3ரக்ஷணார்த்த2மான புருஷகாரத்வம்—ஸ்வபா4க்3யதாதிஶயத்தாலே 'இவளுக்கு என்ன உபகாரம் பண்ணுவோம்" என்று உபகாரம்பண்ணியல்லது த4ரிக்கமாட்டாதானான ஈஶ்வரனை உபகாரம் கொண்டு த4ரிப்பித்த ப்ரகாரமாகையாலே, ஸ்வதந்த்ர வஸ்துவுக்கு, பரதந்த்ரையான இவள் புருஷகாரமாகப் போருமோ? என்கிற ஶங்கைக்கும், ப4க3வத்ஸ்வரூபரூப கு3ணங்களை இடைவிடாமல் அஸங்குசிதமாக அநுப4வித்துப் போருகிற இவளுக்கு, பரது3:க்க2க3ர்ஶநமும் தந்நிவ்ருத்த்யபேக்ஷையும் உபபந்நமாகுமோ? என்கிற ஶங்கைக்கும் அவகாஶமில்லை.

" ஜலாந் மத்ஸ்யாவிவோத்3த்4ருதௌ " " கமலம் ஜலாத3பேதம் ஶோஷயதி ரவி: " என்கிற ப்ரமாணங்களைத் திருவுள்ளத்தே கொண்டு அருளிச்செய்கிறார் (நீரைப்பிரிந்த மீனும் தாமரையும்போலே) என்று.

a பெரியதிரு2-4-1 b இர-திருவ82 c திருவாய்6-10-10 d நான்திருவ32



யாது. பிரிந்தபோது ஜக3த்தைப் பரிவர்த்திப்பன், யுக3ாந்தாக்3னி கூற்றறுத்தோ சுடுவதென்னும்படி நாடு குடிகிடவாதே, கூடின போது a 'ஏழுலகையின்பம் பயக்க' என்னும்படி நாடுவாழ்கையாலே இச்சேர்த்திதானே ஜக3த்3ரக்ஷணத்துக்குறுப்பாயிருக்கும்.

அபராத4ம் கனத்திருக்க இவள் ஸந்நிதி4யாலே காக சூர்ப்பணகைகளுக்குத் தலைபெறலாயிற்று. அபராத4ம் மட்டாயிருக்க இவள் அருகில்லாமையாலே ராவண தாடகைகள்

(ஜக3த்தைப் பரிவர்த்திப்பன்) இதி—இங்கே "புரேவ மே சாருத3திமநிந்தி3தாம் தி3ஶந்தி ஸீதாம் யதி3 நாத்3ய மைதி2லீம்। ஸதே3வ க3ந்த4ர்வ மநுஷ்ய பந்நக3ம் ஜக3த் ஸஶைலம் பரிவர்த்தயாம்யஹம் ॥" என்ற ஸ்ரீராமாயண வசநம் அநுஸந்தே4யம். இனி, இவள் புருஷகாரத்வத்தின் அவஶ்யாபேக்ஷிதத்வத்தை அறிவிக்கைக்காக இவள் ஸந்நிதி4க்கும் அஸந்நிதி4க்குமுண்டான வாசியை அருளிச்செய்கிறார் (அபராத4ம்) என்று தொடங்கி; (காக ஶூர்பணகைகள்) இதி—இவர்கள் அங்க3வைகல்யம் அடைந்தது அங்க3மான பிராட்டி திறத்தில் அபசாரப்பட்டபடியால் என்றும், ராவண தாடகைகள் அங்கி3விநாஶத்தையடைந்தது அங்கி3யான பெருமாள் திறத்தில் அபசாரப்பட்டபடியால் என்றும் கண்டுகொள்வது. பெருமாளுக்கும் பிராட்டிக்கும் அங்க3ாங்கி3 ப4ாவம் ப்ரகார ப்ரகாரி ப4ாவமிறே. (காக) இதி:—"புத்ர: கில ஸ ஶக்ரஸ்ய" என்கிற ராமாயண வசநத்திலுண்டான—ஜயந்த வால்யந்யதரனோ, அபூர்வ புத்ரனோ என்கிற விஶேஷாகாங்க்ஷையை அபூர்வகல்பநா விரஹாநுக்3ருஹீதமான புராண வசந ஸமர்ப்பித ஜயந்த ரூபவிஶேஷம் ஶமிப்பிக்கையாலே, ஸாமாந்ய விஶேஷ ந்யாயத்தாலும், ஸர்வஶாக2ாப்ரத்யயந்யாயத்தாலும் ஜயந்தன் காகரூபேண வந்தான் என்னுமிடம் ஸித்3த4ம்.

a திருவாய் 7-10-1

முடிந்தார்கள். a 'சேர்ந்த திருமால்' என்கிறபடியே பரத்வம் முதலாக ஈஸ்வரகந்த4முள்ள இடமெல்லாம் விடாதே சேர்த்தியும் அநுப4வமும் உகப்பும் மாறுமையாலே. காலம் பாராதே ருசி பிறந்த போதே b திருமாலை விரைந்தடிசேரக் குறையில்லை.

பாத்3மோத்தரத்திலே தி3வ்யாஷ்டோத்தர ஶதநாம விஷயாத்4யாயத்திலே "ஜயந்த த்ராண வரத3:" என்று காகவ்ருத்தாந்த ஸ்த2ாநத்திலே சொல்லுகையாலே காகன் ஜயந்தன் என்னுமிடம் லப்3த4ம். பூர்வவாஸிஷ்ட2த்தில் ஹநூமத்3 விஜயத்தில் கௌ3தம ஶாபத்தால் இந்த்3ரனுக்கு வந்த காகத்வத்தை தே3வதைகள் ஜயந்தனிடத்தில் மாற்றினார்கள் என்கையாலும் காகன் ஜயந்தன் என்னுமிடம் ஸ்பு2டம். (1) "நக2ாக்3ரை: கேந தே பீ4ரு! ராதி3தஞ்ச ஸ்தநாந்தரே" என்று நக2ரூபகரண ஸாமர்த்2யத்தாலும், ஸ்தநரூபாதி4கரண ஸாமர்த்2யத்தாலும். ரத3ந ஶப்3தி3த விலேக2நரூப க்ரியா ஸாமர்த்2யத்தாலும் ராமாயணத்திலே வ்யஞ்ஜிதமாய். "கந்த3ர்ப்பஶரபீடி3த:" என்று பாத்3ம புராணத்திலே கண்டோ2க்தமான காமுகத்வமும். "ப4க்ஷார்த்தீ2" என்று ராமாயணத்திலே கண்டோ2க்தமான ப4க்ஷார்த்தி2த்வமும், ஜயந்தத்வ ப்ரயுக்த வாஸனையாலும், காகஶரீர ஸம்ப3ந்த4 நிப3ந்த4ந வாஸனையாலும் ஜாதிஸ்மரந்யாயேந ஏகத்ர ஸங்க4டநார்ஹமாகையாலும். (2) காகம் அபூர்வபுத்ரன் என்று அந்யத்ர சொல்லியிராமையாலும், (3) இத்தைக்கொண்டே கல்பிக்கில் கல்பநா கௌ3ரவம் ப்ரஸங்கி3க்கையாலும், (4) லிஶப்3த3ஸ்வாரஸ்யத்தாலும், (5) 'இந்த்3ராய புத்ரிணே' என்கிறவிடத்தில் புத்ரஶப்3த3ம் ஜயந்தபரமாகக் கண்டபடியாலும் ஜயந்தன் காமுகதயா காகரூபேண வந்தான் என்று ஸித்3த4ம்.

இம்மதுப்பின் தாத்பர்யாம்ஶத்தையருளிச்செய்கிறார் (காலம் பாராதே) என்று. அதாவது—இப்படி புருஷகார

a மூன்-திருவ 30 b திருவாய் 4-1-2



இவள் சேரநிற்கையாலே ஸ்வதந்த்ரனுக்கும் பிழை நினைந்து கைவிடவொண்ணாது. ஸாபராத4னுக்கும் உடனிருக்கிறமையை நினைத்துக் கால்வாங்க வேண்டா.

உபாய வஸ்துக்களினுடைய நித்யயோக3த்தை ப்ரதிபாதி3க்கிற இம்மதுப்பால், இவ்விஷயத்தை ஆஶ்ரயிப்பார்க்கு ஆஶ்ரயிக்கையில் ருசியே வேண்டுவது. "இரண்டு தலையும் கூடியிருக்கும் த3ஶையிலே ஆஶ்ரயிக்க வேணுமே" என்று ஆஶ்ரயணத்துக்குக் காலம் பார்த்திருக்கவேண்டா என்கை. இத்தால் ஜீவேஶ்வரர்களுக்குப் ப2லிக்குமத்தை அருளிச்செய்கிறார் (இவள் சேரநிற்கையால்) இத்யாதி3.

ஶ்ரீயதே என்கிற கர்மணி வ்யுத்பத்தியாலே க்ருபையும். ஶ்ரயதே என்கிற கர்த்தரி வ்யுத்பத்தியாலே பாரதந்த்ர்யமும். நித்யயோக3 வாசியான மதுப்பாலே அநந்யார்ஹத்வமும் ஆகிற புருஷகாரத்வத்துக்கபேக்ஷிதமான கு3ணத்ரயமும் ஶ்ரீமத்பத3த்தாலே உக்தம்.

உப4யவிபூ4திக்கும் ஈஶ்வரியான பிராட்டிஸ்வரூபம் அசித்கோடியிலேயோ. ஆத்மகோடியிலேயோ. ஈஶ்வரகோடியிலேயோ என்று நிரூபித்தால். அறிவுண்டாகையாலே அசித்கோடியிலன்று. ஐஶ்வர்யத்தாலே ஆத்மகோடியில் அன்று. நித்யபாரதந்த்ர்யத்தாலே ஈஶ்வரகோடியிலுமன்று. ஆனால் தத்வம் நாலாகிறதோ என்னில், அதுக்கு ப்ரமாணோபபத்திகளில்லை. ஆனால் இவளுடைய ஸ்வரூபம் அறுதியிடும்படியென்னென்னில்:— நிரூபகவிஶேஷணம் நிரூபிதவிஶேஷணம் என்றிரண்டாய். சேதநன் நிரூபிதவிஶேஷணமாய், இவள் நிரூபகவிஶேஷணமாயிருக்கும். ஆனால் "அஸ்யேஶாநா ஜக3த:" என்றும். "ஈஶ்வரீம் ஸர்வபூ4தாநாம்" என்றும் ஶ்ருதிகளிலே ஈஶ்வரியாக ஓதிப்போருகையாலே ஈஶ்வரகோடியிலேயாகக் குறையென்னென்னில்; அப்போது நாட்டுக்கு இரண்டு ஈஶ்வரர்கள் கூடாமையாலும், "பதிம் விஶ்வஸ்ய ஆத்மேஶ்வரம்"

"க்ஷராத்மானௌ ஈஶதே தேவ ஏக:" என்று தொடங்கி உண்டான ப்ரமாணப்ரம்பரைகளுக்கு விரோதம் பிறக்கையாலும், யுக்தியில்லாமையாலும் ஈஶ்வரத்வம் கூடாது. அங்கு ஓதிப்போருகிற ஈஶ்வரத்வம் பத்நீத்வநிபந்தநமாகக் கடவது. ராஜமஹிஷியை ஸோபசாரமாகச் சொல்லாதபோது அவனுடைய ரோஷத்துக்கிலக்காமித்தனையிறே. "பும்ப்ரதாநேஶ்வரேஶ்வரீம்" என்று தொடங்கி இவளுடைய வைபவங்களை ப்ரதிபாதிக்கிற ப்ரதேஶங்களில் அவளுடைய போக்யதாதிஶயத்தைச் சொல்லுகிறதித்தனை. ஆனலிவள் சேதநஸமானையோ என்னில், அப்படியன்று, பத்தரிற்காட்டில் முக்தர் வ்யாவ்ருத்தர். முக்தரிற்காட்டில் நித்யர் வ்யாவ்ருத்தர். நித்யரிற்காட்டில் அநந்த கருடாதிகள் வ்யாவ்ருத்தர். அவர்களிற்காட்டில் தேவீஜநங்கள் வ்யாவ்ருத்தர். தேவீஜநங்களிற்காட்டில் பூநீளைகள் வ்யாவ்ருத்தர். பூநீளைகளிற்காட்டில் இவள் வ்யாவ்ருத்தை. ஆகையால் உபயவிபூதிக்கும் ஈஶ்வரியாய்ப் போருகிறது. இவளுக்கு ஸ்வரூபத்தாலே சேதநஸாம்யமுண்டு. ஸ்வபாவத்தாலே ஈஶ்வரஸாம்யமுமுண்டு. இது நித்யர்க்கும் முக்தர்க்கும் உண்டோ என்னில், இவர்களுக்குமின்றியிலே, தேவீஜநங்களுக்குமின்றியிலே, ஈஶ்வரன் தனக்குமின்றியிலே, இருப்பன சில குணவிஶேஷங்கள் உண்டு. அவையென்னென்னில்; (1) நிரூபகத்வம் (2) ஆநுரூப்யம் (3) அபிமதத்வம் (4) அஶேஷஶேஷித்வ ஸம்பந்த த்வாரபாவம் (5) ஆஶ்ரயணஸித்தி (6) ப்ராப்யபூரகத்வம்.

இவ்வர்த்தங்களை அபியுக்தரும் வெளியிட்டார்கள். "திருவினுக்கரசே" "திருமாலே" என்று நிரூபகத்வத்தையும். "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" என்று ஆநுரூப்யத்தையும். "அல்லிமலர்மகள் போகமயக்குக்கள்" என்று போக்யதையையும், "பூவின்மிசை நங்கைக்குமின்பன்" என்று அபிமதத்வத்தையும். "திருமாமகளாலருள்மாரி" "திருமாலால் அருளப்பட்ட சடகோபன்"



என்று அஶேஷஶேஷித்வ ஸம்பந்த த்வாரபாவத்தையும். "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று ஆஶ்ரயண ஸித்தியையும், "திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றார்களே" என்று ததீயபர்யந்தமாக ப்ராப்யபூரகத்வத்தையும் வெளியிட்டார்கள். ஈஶ்வர விஷயத்தில் இவளுடைய பாரதந்த்ர்யாநந்யார்ஹத்வங்களும் ஸ்வரூபப்ரயுக்தமான மாத்ரமன்றிக்கே, "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" என்றும், "விஷ்ணுபத்நீ" என்றும் சொல்லுகிற பத்நீத்வ ப்ரயுக்தமாயும், "அஹந்தா ப்ரஹ்மணஸ்தஸ்ய ஸாஹமஸ்மி ஸநாதநீ" என்றும், "ஸ்ரீவத்ஸ வக்ஷா: நித்யஶ்ரீ:" என்றும் சொல்லுகிற ஸ்வரூபநிரூபகத்வாதி ஸித்தமான அநந்யத்வ ப்ரயுக்தமாயுமிருக்கும். இப்படியிருக்கையாலேயிறே அல்லாதார்க்கடைய மிதுநஶேஷத்வமும், இவளொருத்திக்கும் ததேகஶேஷத்வமுமாய்த்து. இந்த அவ்யவதாநேந உண்டான ஸம்பந்தத்தாலேயிறே இவளுக்கு ஈஶ்வரனை வஶீகரிக்குமளவில் புருஷகாரம் வேண்டாதொழிகிறது. ஆக இந்த குணங்களாலேயிறே இவள் ஸர்வாதிஶயகாரியாயும் இருக்கிறது. "திருமாமகள் கேள்வா தேவா" என்றும், "திருமகளார் தனிக்கேள்வன் பெருமையுடைய பிரானார்" என்றும் எம்பெருமானுக்கு ஶேஷித்வ பூர்த்தி பிறப்பது இவளாலே. இவளுடைய ஸத்தை எம்பெருமானிட்ட வழக்காயிருக்கும். எம்பெருமானுடைய ஐஶ்வர்யம் இவளிட்ட வழக்காயிருக்கும். இருவருடைய ஸ்வரூபமும் பூவும் மணமும் போலேயிறே. பூவையொழிய மணத்துக்கு நிலையில்லை. மணத்தையொழியப் பூவுக்கு ஏற்றமில்லை. இருவரையும் பிரித்துக் காண்பாரும் உண்டாகில், ஶூர்ப்பணகையும், ராவணனும் பட்டதுபடுவார்கள். ஆகையிறே—"திருமாலே நானும் உனக்குப் பழவடியேன்" என்று ஶேஷத்வப்ரதிஸம்பந்தி ஒருமிதுநமாய். "நாளும் நம் திருவுடையடிகள் நலங்கழல் வணங்கி" என்று ஆஶ்ரயண ப்ரதிஸம்பந்தி ஒருமிதுநமாய். "அடிமை செய்வார் திருமாலுக்கே" என்று கைங்கர்ய ப்ரதிஸம்பந்தி ஒரு

16-12-90

## நாராயணபதா3ர்த்த2ம்

அபராத4த்தாலே அமுக்குண்டு புருஷகாரத்தாலே தலையெடுத்து, சேர்ப்பாரே a சிதகுரைக்கிலும் மறுதலைத்துக் கைவிடாதே நோக்கும்படியான வாத்ஸல்யாதி3களைச் சொல்லுகிறது நாராயணபத3ம். விட்டபோது கைக்கொண்டு விடுவிக்க

மிது2நமேயாயிருக்கிறது. இத்தாலேயிறே பா4ஷ்யகாரரும் ஒருமிது2நமொழிய வஸ்து இல்லையென்றறுதியிட்டது. மத்ஸ்யத்தினுடைய ஆகாரமெல்லாம் ஜலமயமாயிருக்குமோபாதி ஸ்ரீமானுடைய வடிவெல்லாம் ஸ்ரீமயமாய் இருக்குமென்று பெரியமுதலியாரும் நஞ்ஜீயரும் அருளிச்செய்து போருவர்கள்.

ஆக ஸ்ரீமத் பத3த்தாலே புருஷசாரமும் புருஷகாரத்தினுடைய ஈஶ்வர நித்யயோக3மும் சொல்லிற்றாயிற்று. ஆக இப்படி ஸ்ரீமத்பதா3ர்த்த2த்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம் நாராயண பதா3ர்த்த2த்தை அருளிச்செய்கிறார் (அபராத4த்தாலே) என்று தொடங்கி. அதாவது, உபதே3ஶத்தாலும் அழகாலும் கண்ணழிவற வஶீகரித்துக் கார்யங்கொள்ளவல்ல புருஷகார ப3லத்தாலே, ஆஶ்ரயணோந்முக2னான சேதநன் அநாதி3காலம் பண்ணின அபராத4ங்களைப் பார்த்துச்சீறி "அங்கீ3கரியேன்" என்றிருக்கும் ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யம் தலைமடிந்தால், அதன் கீழ்த் தலையெடுக்கப்பெறாத செறிப்புத் தீர்ந்து தலையெடுக்கும் கு3ணங்களான வாத்ஸல்யாதி3களைச் சொல்லுகிறது 'நாராயணபத3ம்' என்கை. புருஷகாராபேக்ஷயா உபாயத்துக்குண்டான ஏற்றத்தை அருளிச்செய்கிறார் (விட்டபோது) என்று தொடங்கி. "புருஷகாரமும் மிகையென்னலாம்படியான உபாயவைப4வம்" என்றிறே மாமுனிகள் திருவாக்கு. "மிகை" என்றது—"நாஸௌ புருஷகாரேண"

a பெரியாழ்திரு 4-9-2



வொண்ணாதபடி காட்டிக்கொடுத்தவள்தன்னையும் விட்டுப் பற்றும்படியிறே ஈஶ்வரனுடைய கு3ணாதி4க்யமிருப்பது. a 'ஈறிலவண் புகழ்' என்கிற b எண்ணில் பல் குணங்களும் இதுக்கர்த்த2மேயாகிலும், உபாய ப்ரகரணத்திலே c 'நிகரில் புகழாய்' என்று தொடங்கி ஆழ்வார் அருளிச்செய்த நாலு கு3ணங்களும் இதுக்கு ப்ரதா4நார்த்த2மாகக் கடவது. அதில் வாத்ஸல்யமாவது—அன்றீன்ற கன்றினுடம்பில் அழுக்கை

இத்யாதி3யைப்பற்ற என்று கண்டுகொள்வது. இப்படி அபேக்ஷிதமான புருஷகாரம்தானும் தன்னேற்றமாம்படியிருக்கிறன—நாராயண ஶப்3த3த்தில் தோற்றுகிற ஸம்ப3ந்த4மும் கு3ணங்களும் என்றபடி. இது "தன்னடியார்" என்கிற பாட்டிலே காணலாம். "ஸ்ரீத4ர: ஸ்ரீகர: ஶ்ரேய: ஸ்ரீமாந் லோகத்ரயாஶ்ரய:" இத்யாதி3களிலே ப4க3வந்நாமமாக ப்ரஸித்3த4மான ஸ்ரீமச்ச2ப்3த3மே அமையாதோ? என்னில்; பூர்வக2ண்ட3த்தில் உபாயபா4வத்துக்குறுப்பான கு3ணவிஶேஷாநுஸந்தா4நார்த்த2மாகவும், உத்தரக2ண்ட3த்தில் ஸர்வவிஶிஷ்டனை ஶேஷி—ப்ராப்யனாய்த் தோற்றுகைக்காகவும் நாராயண ஶப்3த3ம் அபேக்ஷிதமாகையால், இங்கு ஸ்ரீமச்ச2ப்3த3ம் விஶேஷணம். பூர்வக2ண்ட3த்தில் நாராயண ஶப்3த3த்துக்கு ஶரண்யதையிலே நோக்கானபடியாலே "நிகரில் புகழாய்" இத்யாதி3களிலே ஸங்க்3ருஹீதங்களான வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்4ய ஜ்ஞாந ஶக்தி ப்ராப்தி பூர்த்தி காருண்யாதி3கள் இங்கு அநுஸந்தே4யங்களில் ப்ரதா4நதமங்கள். இது தன்னை அருளிச்செய்கிறார் (ஈறில) என்று தொடங்கி.

வாத்ஸல்யாதி3கு3ணசதுஷ்டயம் ஆஶ்ரயணஸௌகர்யாபாத3கமாகும். "ஆஶ்ரயணே—ஶரணவரணே, ஸௌகர்யஸ்ய—ஸௌகரத்வஸ்ய, ஆபாத3கா:—ஜ்ஞாபகா:" என்றபடி. இங்கே "சாக்ஷுஷ பூர்வகாஶ்ரயணே நிக்3ரஹாபாத3கத்வா

a திருவாய் 1-2-10 b பெரியதிரு 5-7-2 c திருவாய் 6-10-10

போ4க்3யமாகக்கொண்டு பாலைச்சுரந்து கொடுத்து வளர்த்து வேறொன்றை நினையாதே தன்னையே நினைத்துக் குமிறும்படி பண்ணி, முன்னணைக் கன்றையும், புல்லிட வந்தவர்களையும், விட்டுக் கட்டுவாரையும், நலியத் தேடுகிறவர்களையும் உதைத்து நோக்குகிற தே4நுகு3ணமிறே. அப்படியே இவனும்

---

ஶக்யத்வாந்யதரபு3த்3தி4 நிவர்த்தநத்3வாரா ஆஶ்ரயணப்ரவ்ருத்த்யௌபயிக ஜ்ஞாநவிஷயத்வம் ஆஶ்ரயணோபயோகி3த்வம்" என்ற பூர்வர்கள் நிஷ்கர்ஷம் அநுஸந்தே4யம். வாத்ஸல்யம்—நிக்3ரஹாபாத3கத்வபு3த்3தி4யையும், ஸௌலப்4யம்—அஶக்யத்வ பு3த்3தி4யையும் நிவர்த்திப்பிக்கும் என்றபடி. வாத்ஸல்யமாவது:—"வத்ஸம் லாலயதி" என்கிற வ்யுத்பத்தியாலே, அன்றீன்ற கன்றின் பக்கல் தாய் பண்ணும் வ்யாமோஹம். அதாவது—சுவடுபட்ட புல்லையும் காற்கடையில் கொள்ளும் த3ஶையிலும், தன் கடையில் நின்றும் புறப்பட்ட கன்றினுடைய வழும்புநாற்றத்தையே தனக்கு போ4க்3யமாக ஸ்வீகரித்து தன்னுடைய க்ஷீரத்தாலே அத்தை த4ரிப்பிக்குமாப்போலே, "தோ3ஷோ யத்3யபி தஸ்ய ஸ்யாத்" என்கிறபடியே, ஆஶ்ரிதக3தமான தோ3ஷங்களைத் தன் பேறாக மேல்விழுந்து போக்கித் தன் கு3ணங்களாலே அவர்களை த4ரிப்பிக்கை. ஆத்மகு3ணாநுஸந்தா4நமாகையாலே ஆஶ்ரயணாநந்தரம் வரும் பாபவிமோசநவ்யாபாரத்தோடு விரோத4ம் பிறவாது. வத்ஸத்தின் பக்கல் தே4நு இருக்குமிருப்பு வாத்ஸல்யம். அதாவது அதினுடைய தோ3ஷத்தை போ4க்3யமாகக் கொள்ளுகையும், க்ஷீரத்தைக் கொடுத்து வளர்க்கையும், எதிரிட்டவரைக் கொம்பிலும் குளம்பிலும் கொண்டுநோக்குகையுமிறே. அப்படியே ஈஶ்வரனும், தோ3ஷத்தை போ4க்3யமாகக் கொண்டு, "பாலே போல் சீர்" என்கிற கு3ணங்களாலே த4ரிப்பித்து, "கத2ஞ்சந ந த்யஜேயம்" என்றும், "அப4யம் ஸர்வ பூ4தேப்4ய:" என்றும் சொல்லுகிறபடியே அநுகூலர் நிமித்தமாகவும் ப்ரதிகூலர் நிமித்தமாகவும் நோக்கும்



என்றபடி. இங்கே "வத்ஸல:—வத்ஸாந் ஸ்வோத்ஸங்காந் காமயதே இதி— 'வத்ஸாம்ஸாப்4யாம் காமப3லே' இதி லச்ப்ரத்யய:" என்ற ஸ்ரீ பராஶரப4ட்டர் பா4ஷ்யமும், "வாத்ஸல்யம் தோ3ஷேஷ்வபி கு3ணத்வ பு3த்3தி4: யதா2 மாதுர்வத்ஸே" என்ற ஸமந்வயாதி4கரணஶ்ருதப்ரகாஶிகா வாக்யமும், "ப்ரியதமையுடம்பில் அழுக்கும் வத்ஸத்தினுடைய வழும்பும்போலே ப்ரபந்நனுடைய தோ3ஷம்" என்கிற வார்த்தையும், "து3ஷ்டரும் ஶரணாக3தரானால் ஈஶ்வரன் கைவிடாதே திருத்தும் என்றபடி" என்ற ரஹஸ்யத்ரயஸார வாக்யமும், "ப்ரபந்நாந் மாத4வ: ஸர்வாந் தோ3ஷேண பரிக்3ருஹ்யதே। அத்3ய ஜாதம் யதா2 வத்ஸம் தோ3ஷேண ஸஹ வத்ஸலா ||" என்ற வசநமும், "அற்றமுரைக்கில் அடைந்தவர்பால் அப்புயைகோன் குற்றம் உணர்ந்து இகழும் கொள்கையனோ — எற்றே தன் கன்றின் உடம்பின் வழுவன்றோ காதலிப்பது அன்றதனை ஈன்றுகந்த ஆ" என்ற ஞானஸாரப் பாசுரமும் அநுஸந்தே4யங்கள். "தோ3ஷோ யத்3யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அக3ர்ஹிதம்" என்றிறே ஶரண்யன் திருவாக்கிருக்கும்படி. "ஸ்யாத்—என்று ப்ரார்த்த2நாயாம் லிங்" என்றும், "அக3ர்ஹிதம்"—க3ர்ஹிதவிரோதி4—ஶ்லாக்4யம் என்றுமிறே வ்யாக்2யாந சக்ரவர்த்தியின் வ்யாக்2யாநமிருக்கும்படி. கிஞ்ச, ப்ரீதி விஶேஷ விஶிஷ்ட விஷயத்தில் வத்ஸல ஶப்3த3த்துக்கு ஶக்தி ஶாப்3தி3கராலே நிரூபிக்கப்பட்டுள்ளது. காஶிகாவ்ருத்தி தத்வபோ3தி4ந்யாதி3களிலே இவ்வர்த்த2ம் ஸ்பஷ்டம். "வத்ஸாம்ஸாப்4யாம் காமப3லே—இதி லச் ப்ரத்யய:। வத்ஸல: இதி ஸ்நேஹவாந் உச்யதே" என்றிறே அவ்விடத்து வாக்யம். ப்ரீதி விஶேஷத்தைக் குறிக்குமதாக அறுதியிடப்பட்ட "லச்" ப்ரத்யயத்துக்கு அஜ்ஞாந பரமாக வ்யாக்2யாநம் பண்ணுவது அநுசிதம். ஏதேந "அவிஜ்ஞாதா—ப்ரபந்நாபராத4பரிக3ணநம் கு3ண ஏவ। 'த்வம் ஹி அஜ்ஞ ஏவ ஆஶ்ரித

தே3ாஷஜோஷண:' என்றாரிறே தாதபாத3ரும்'' என்ற பட்டர் ப4ாஷ்யமும் நிர்வஹிக்கப்பட்டது. காருண்யாதி3களை ப்ரஸரிக்கவொட்டாமல் தடுக்கிற தே3ாஷஜ்ஞாநம் இல்லை என்றிறே அவ்வாக்யத்தின் கருத்து. தே3ாஷத்வேந ஜ்ஞாநம் இல்லை. கிந்து கு3ணத்வேந ஜ்ஞாநம் உண்டு என்றபடி. தத3தி4க3மாதி4கரண ஶ்ருதப்ரகாஶிகையில் ப4க3வானுக்கு தே3ாஷஜ்ஞாநம் உக்தமிறே. ''ந ததோ விஜுகு3ப்ஸதே'' என்ற கட2வல்லீ வாக்யத்துக்கு ''தே3ாஷாந் பே4ாக்3யதயா பஶ்யதி வாத்ஸல்யாதிஶயாத்'' என்றிறே ஶ்ரீரங்க3ராமாநுஜ ஸ்வாமி ப4ாஷ்யம் இட்டருளினார். அஹோபி3ல மட2ாதி4பதி ஶ்ரீ நாராயணமுநீந்த்3ரர் அருளிச்செய்த ரஹஸ்ய த்ரய ஜீவாதுவிலும் இவ்வர்த்த2ம் ஸ்பஷ்டம். மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களும் நற்கலைகள் ஆய்ந்து, அம்தமிழால் ''நன்று செய்தார்'' ''குணம் கொள்ளும்'' ''நற்றமாகவே'' என்று அருளிச்செய்து போந்தார்கள். ''ஆஶிஹ்ய தாந் நிரவஶேஷம் அலப்3த4த்ருப்தி: ஔத்ஸுக்யபூர்வமுபஹ்ருத்ய மஹாபராத4ாந்'' என்றிறே கவிதார்க்கிக ஸிம்ஹ கே4ாஷமிருக்கும்படி. ஸம்ஸாரிக்குத் தன் குற்றம் கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்ய கு3ணத3ர்ஶநம். இதனாலும் ப்ரபத்தி உபாயமன்று என்று தேறுகிறது. ப்ரபத்தி உபாயமாகில், அதனாலேயே தே3ாஷம் நஶிக்குமாகையால், வாத்ஸல்ய பர்யாலோசநம் நிஷ்ப்ரயோஜநமாம். ப்3ரஹ்மஹத்யைக்கு ப்ராயஶ்சித்தமாக த்3வாத3ஶவார்ஷிகம் அநுஷ்டிக்குமவனுக்கு வாத்ஸல்ய கு3ணபர்யாலோசநம் நிஷ்ப்ரயோஜநம். அவ்வோபாதி இங்கேயும் வரும். இதுகொண்டும் ப்ரபத்தி அநுபாயம் எனத் தெளிய ப்ராப்தம். இங்கே பே4ாக்3யமாகக் கூறப்படும் தே3ாஷங்கள் பூர்வபாபங்களாகும். அன்றிக்கே தே3ாஷமாவது ஶரீரம்; அதனை பே4ாக்3யமாகக் கொள்கிறான் ப4க3வான் என்னவுமாம். இவ்வர்த்த2த்தை ''ஜ்ஞாநியை விக்3ரஹத்தோடே ஆத3ரிக்கும்'' என்று லோகதே3ஶிகன் அருளிச்செய்தார். இது தன்னை அருளிச்செய்கிறார்



இன்று ஜ்ஞாநம் பிறந்தவனுடைய அழுக்குடம்பை a 'உருவமுமாருயிருமுடனே' என்னும்படி பே4ாக்3யமாகக்கொண்டு. b பாலே போல் சீரில் c இன்னருள் சுரந்து கொடுத்து வளர்த்துத் d தாய்நாடு கன்றேபோல் e தன்னையே நினைக்கச் செய்து, f மறவாதழைக்கப்பண்ணி. ஸூரிகளையும் g 'அனந்தன் பாலும் கருடன் பாலும்' h 'தவம் செய்தார் வெள்கி நிற்ப' என்கிறபடியே திருமகளையும் உபேக்ஷித்து இவனை நோக்கக் கடவனாயிருக்கும்.

இப்படிச் செய்கைக்கடியான குடல்துடக்கு—ஸ்வாமித்வமாவது. இவன் i யாதானும் பற்றி j ஓடும்போதும் விடாதே

(அழுக்குடம்பை) என்று தொடங்கி. ஆக தே3ாஷமாவது—பூர்வபாபமும், ப்ராமாதி3க உத்தரபாபமும், அழுக்குடம்புமாகிறது. இவற்றை பே4ாக்3யமாகக் கொள்ளுகிறான் வத்ஸலன் என்றதாயிற்று. ஆஶ்ரயணாநந்தரம் பு3த்3தி4பூர்வமாகப் பாபத்தைச் செய்யான். புண்யத்துக்கஞ்சுகிறவன் பாபத்தைச் செய்யானிறே.

ஸ்வாமித்வமாவது:—இந்த வாத்ஸல்யத்துக்கு ஊற்றாய், ''ஈஶ்வர ப்ராப்தி ஆத்மாவுக்கன்று, ஆத்மப்ராப்தி ஈஶ்வரனுக்கு'' என்னும்படி இச்சேதந வஸ்துவை உடையனாகை. உடையானிறே உடைமையைப் பெறுகையிலே யத்நம் பண்ணுவான். ''ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே'' என்றிறே வேதா3ந்தஸார நிஷ்கர்ஷமிருக்கும்படி. அதாவது, ஸ்வாமித்வம்; இவன் விமுக2னான த3ஶையிலும் விடாதே நின்று ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகைக்கு ஹேதுவான ஸம்ப3ந்த4விஶேஷம். அதாவது—

a திருவாய் 9-6-5 b பெரியதிருவ 58 c பெரியதிரு 5-8-1 d முதல் திருவ 30 e பெரியதிரு 7-3-2 f பெரியதிரு 7-1-1 g பெரியாழ்-திரு 5-4-8 h திருமாலை 44 i திருவிருத்தம் 95 j நான்-திருவ 88

தொடர்ந்து உருவழியாமே a ஒருமாவயிற்றினுள்ளே வைத்து நோக்கி அத்3வேஷம் தொடங்கி அடிமையெல்லையாகத் தானே உண்டாக்கி, இழவுபேறு தன்னதாம்படி உடையவனா யிருக்கும் உறவை—ஸ்வாமித்வமென்கிறது.

இந்த கு3ணத்தைக் கண்டு b வானவர் சிந்தையுள் வைத்துச் சொல்லும் c வானோரிறையைக் d கள்ளத்தேன் நானும் e எச்சில் வாயால் f வாய்க்கொள்ளமாட்டேனென்று அகல்வாரளவில் பெருமை சிறுமைகள் பாராதே இவர்கள் நினைவைத் தன் பேறாக மேல்விழுந்து ஒருநீராகக் கலக்கை—ஸௌஶீல்யம்.

---

உடையவனாய் இருக்குமிருப்பு; அத்3வேஷம் தொடங்கிக் கைங்கர்ய பர்யந்தமாக உண்டான ஸ்வபா4வவிஶேஷங்களை யெல்லாம் உண்டாக்குகிறது, இங்க ப3ந்த4விஶேஷமடியாக என்றபடி. இது தன்னை அருளிச்செய்கிறார் (அத்3வேஷம் தொடங்கி) என்று தொடங்கி.

ஸௌஶீல்யமாவது:— உப4யவிபூ4தி யோக3த்தாலும், பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தியாலும், நிரங்குஶமா யிருக்கிற ஈஶ்வரனுடைய மேன்மையையும், தங்கள் சிறுமையையும் பார்த்து "அவனெவ்விடத்தான் யானார்" என்று பிற்காலியாதபடி எல்லாரோடும் ஒக்க மேல்விழுந்து புரையறக் கலக்கையும், அது தன் பேறாக இருக்கையும், எதிர்த்தலையில் அபேக்ஷையின்றியிலேயிருக்கக் கலக்கையும், இது தன்னை அருளிச்செய்கிறார்—(இந்த கு3ணத்தைக் கண்டு) என்று தொடங்கி. அதாவது—வத்ஸலனுமாய், வகுத்த வனுமாயிருந்தாலும் தன்னுடைய விஶ்ருங்க2லிதமான ஐஶ்வர்யம் தோற்றும்படி இருக்குமாகில், அதிக்ஷுத்3ரனான இச்சேதநனாலே ஆஶ்ரயிக்கவொண்ணாது என்னவேண்டாத படி, பெரியனான தன்னைத் தாழவிட்டு "ஹே க்ருஷ்ண!

a திருவாய் 10-7-6 b திருவாய் 1-10-7 c திருவாய் 1-5-1 d திரு மாலை 34 e திருக்குறு 12 f பெரியாழ்-திரு 5-1-1



a கட்கரிய திருமேனியை b நிலக்கணங்களும் காணும்படி கண்ணுக்கிலக்காக்குகை—ஸௌலப்4யம். c சன்மம் பலபல செய்து d கண்காணவந்து ஓரொருத்தர்க்கு ஓரொரு தே3ஶகாலங்களிலே வடிவைக் காட்டின ஸௌலப்4யம் பரத்வமென்னலாம்படி எல்லா தே3ஶகாலங்களிலும் e இம்மட உலகர் காணலாம்படி பண்ணின அர்ச்சாவதார ஸௌலப்4யம் விஞ்சியிருக்கும்.

---

ஹே யாத3வ! ஹே ஸகே2!" என்னலாம்படி சிறியாரோடே ஒருநீராகக் கலந்து பரிமாறுகை என்றபடி.

ஸௌலப்4யமாவது:— கண்ணுக்கு விஷயமன்றிக்கே யிருக்கிற தான் கண்ணாலே கண்டு ஆஶ்ரயிக்கலாம்படி எளியனாயிருக்கை. இது தன்னை அருளிச்செய்கிறார். (கட் கரிய) என்று தொடங்கி. அதாவது— "மாம்" என்று ஸோநாதூ4ளிதூ4ஸரிதமான திருக்குழலும், கையும் உழவு கோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸௌப4யம் பரத்வ மென்னும்படியிருக்கும், இந்நாராயண பத3த்தில் ஸௌலப்4யம். அதாகிறது—அர்ச்சாவதார ஸௌலப்4யம். "எளி வரும், இணைவனும் என்றவை பரத்வமாம்படி அவனுக்கும் ஸௌலப்4யகாஷ்டை2" என்றிறே இவர் தாமும் ஆசார்ய ஹ்ருத3யத்தில் அருளிச்செய்தருளினார். அது தன்னை அருளிச் செய்கிறார் (சன்மம் பல) என்று தொடங்கி. பரமபத3ம் க்ஷீராப்3தி4 தொடக்கமானவை தே3ஶவிப்ரகர்ஷத்தாலே, ஆஶ்ரயிக்கவொண்ணாது. விப4வாதி3கள் இத3ாநீந்தநர்க்குக் காலவிப்ரகர்ஷத்தாலே ஆஶ்ரயிக்கவொண்ணாது. அந்தர்யாமித்வாதி3கள் அசக்ஷுர்விஷயமாகையாலே ஆஶ்ரயிக்க வொண்ணாது. இனி இம்மூன்று குற்றங்களுமின்றிக்கே யிருக்குமது "பின்னானார் வணங்கும் சோதி திருமூழிக்களம்" என்றும் "அடியோமுக்கே எம்பெருமானல்லீரோ நீர்

a திருவாய் 7-7-11 b திருச்சந்த 16 c திருவாய் 3-10-1 d திருவாய் 3-10-6 e திருவாய் 9-2-7

தோ3ஷம் பாராதே கார்யம் செய்யுமென்று, வெருவாதே கண்டு பற்றினவர்களுக்குக் கார்யம் செய்கைக்குறுப்பான

---

இந்தளூரீரே" என்றும் குலாவப்படுகிற அர்ச்சாவதாரமிறே என்றபடி.

இக்கு3ணங்களுக்கு இவ்விடத்தில் விநியோக3ங்கள் எவை என்ன அருளிச்செய்கிறார் (தோ3ஷம் பாராதே) இத்யாதி3.

உத்தரார்த்3த4த்தில் சொல்லுகிற விரோதி4 நிவ்ருத்தி பூர்வகமான ப்ராப்யஸித்3தி4க்கு ஏகாந்தமாய். அஹம் ஶப்3த3த்திலே உக்தமான ஜ்ஞாநஶக்த்யாதி3 கு3ணசதுஷ்கமும், அவற்றுக்குப் பெருநிலைநிற்கும் இரக்கமும் இப்பத3த்திலே அநுஸந்தே4யம் என்கிறார் (கார்யம் செய்கைக்கு) என்று தொடங்கி. ஸ்வீகாரத்துக்கு உபயுக்தங்களான கு3ண விஶேஷங்களோபாதி உபாயத்வோபயோகி3களான கு3ண விஶேஷங்களும் இவ்விடத்தே அநுஸந்தே4யங்கள். ப்ரத2ம பாத3ாநந்தரத்தில் அஸ்மச் ச2ப்3த3த்துக்குப்போலே, இதுக்கு ஸங்கோசமில்லாமையாலே, அஸ்மச் ச2ப்3ச3 த்3வயார்த்த2மும் இவ்விடத்திலே அநுஸந்தே4யம் என்றபடி. இவையிறே ஆஶ்ரித கார்யாபாத3க கு3ணங்கள்:. ஆஶ்ரிதஸ்ய—ஶரணவரணகர்த்து:, கார்யஸ்ய—அநிஷ்டநிவ்ருத்த்யாதே3:, ஆபாத3கா:—உபயோகி3ந: என்றபடி. ஸர்வஜ்ஞத்வமாவது—"அஜ்ஞாதம் நாஸ்தி தே கிஞ்சித்" "யோ வேத்தி யுக3பத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா3 ஸ்வத:" என்கிறபடியே ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிக்கை. ஸர்வஶக்தித்வமாவது:—அக4டிதக4டநாஸாமர்த்2யம். ஹேயரான நித்ய ஸம்ஸாரிகளை, உபாதே3யதமரான நித்யஸூரிகளோடு ஒரு கோவையாக்கவல்ல அத்3பு4தஶக்தி. பூர்த்தியாவது:— அவாப்த ஸமஸ்தகாமத்வம். ப்ராப்தியாவது:—"அஶேஷ சித3சித்3 வஸ்து ஶேஷிபூ4த" என்கிறபடியே ஸமஸ்த பதா3ர்த்த2ாநுப3ந்தி4 ஸகலாதி3ஶயங்களுக்கும் தான் ப2லியாய் இருக்கை.



ஜ்ஞாந ஶக்தி க்ருபைகளும் இதிலே அநுஸந்தி4க்கப்படும்

---

ழ் வாத்ஸல்யாதி3ப்ரகரணத்திலே சொன்ன ஸ்வாமித்வத்துக்கும், இந்த ஶேஷித்வத்துக்கும் வாசி என்? என்னில்; தன்னை ஒழிந்த ஸமஸ்த வஸ்துக்களையும் தன் உடைமையென அபி4மாநித்தல் ஸ்வாமித்வம். அவற்றாலே ஆஹிதமான அதிஶயத்தை உடைத்தாயிருக்கை ஶேஷித்வம். ஸ்ரீபா4ஷ்யகாரரும் "அஶேஷசித3சித்3வஸ்து ஶேஷி பூ4த! அகி2ல ஜக3த் ஸ்வாமிந்!" என்று ஸ்வாமித்வ ஶேஷித்வங்களைப் பிரிய அருளிச்செய்தாரிறே. இங்கே சிலர் 'சேதந ஶேஷித்வம் ஸ்வாமித்வம்' என்று கொண்டு, சேதநாசேதந ஸாத4ாரணமாக ஶேஷித்வத்தையும், சேதந மாத்ரவிஶ்ராந்தமாக ஸ்வஸ்வாமிபா4வத்தையும் நிர்வஹிப்பர்கள். அதுபொருளன்று. கிஞ்சித்காரப்ரதிஸம்ப3ந்தி4த்வமே ஶேஷித்வமாகையால். கிஞ்சித்காரமில்லாமலும் ஸ்வஸ்வாமிபா4வம் காண்கையாலும் பூர்வோக்தநிர்வாஹமே யுக்தமென்னத்தகும்.

கருணை உந்மேஷமடையாதபோது இவையித்தனை கு3ணங்களும் தோ3ஷமாமிறே. இந்த்3ரியங்களுள் மநஸ்ஸுக்கு ப்ராதா4ந்யம்போலே திருக்கல்யாண கு3ணங்களுள் கருணைக்கு ப்ராதா4ந்யம். "அருள் கொண்டாடு மடியவர்" என்றாரிறே ஸ்ரீமது4ரகவிகளும். அக்கு3ணமும் இங்கே அநுஸந்தே4யம் என்கிறார் (க்ருபை) என்று தொடங்கி.

ஆஶ்ரயமான ஸ்வரூபத்துக்கு ஆஶ்ரயணீயத்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயம் உண்டானாப்போலே, ஆஶ்ரயியான கு3ணவிஶேஷங்களுக்கும் ஆகாரத்ரயம் உண்டாகக்கடவதாகையாலே வாத்ஸல்யாதி3கள் ஆஶ்ரயணத்துக்குறுப்பாய், ஜ்ஞாநாதி3கள் ஶரண்யத்வத்துக்குறுப்பாய், ஸௌந்த3ர்யாதி3கள் ப்ராப்யத்வத்துக்குறுப்பாயிருக்கும்.

a 'நல்கித் தான் காத்தளிக்கும்' என்று வாத்ஸல்யமும், b 'முழுவேழுலகுக்கும் நாதன்' என்று ஸ்வாமித்வமும், c 'நங்கள் பிரான்' என்று ஸௌஶீல்யமும், d 'நாவாயுறைகின்ற' என்று ஸௌலப்4யமும், e 'ஞாலமுண்டாய் ஞானமூர்த்தி' என்று ஜ்ஞாந ஶக்திகளும், f 'நல்லருள் நம்பெருமான்' என்து க்ருபையும் நாராயண ஶப்3த3த்துக்கு அர்த்த2மாக ஆழ்வார் அநுஸந்தி4த்தருளினார்.

---

இந்த நாராயணபத3ம் பூர்வக2ண்ட3த்தில் உள்ள தொன்றுகையாலே ஆஶ்ரயணத்துக்கேகாந்தமான ஸௌலப்4யத்திலே நோக்காயிருக்கும். சரமஶ்லோகத்தில் "மாம்" ஶப்3த3ம் ஸௌலப்4யபரமாகிலும், அங்குத்தை ஸௌலப்4யம் "மய்யாஸக்தமநா: பார்த்த2" என்று தன் பக்கலிலே ஆஸக்தமான மநஸ்ஸை உடைய அர்ஜுநன் ஒருவனுக்குமாய் இருக்கும். அர்ச்சாவதார ஸௌலப்4யம் ஸர்வவிஷயமாய் இருக்கும். "நீயே நமக்கு வேண்டா" என்றவர்களையும் விடமாட்டாத ஸௌலப்4யமிறே இது. அந்த ஸௌலப்4யம் காத3ாசித்கமாயிருக்கும். இந்த ஸௌலப்4யம் ஸார்வகாலிகமாயிறேயிருப்பது. இந்த எளிமைக்கு வாசகமிறே நாராயணபத3ம்.

இவ்வர்த்த2ங்களை ஆழ்வார் பாசுரங்கொண்டு நிரூபிக்கிறார் (நல்கி) என்று தொடங்கி. இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம். ஸௌகர்யாபாத3கமாயும், கார்யாபாத3கமாயும் சொன்ன இக்கு3ணங்கள் எல்லாம், இவை காண்கையிலே அபேக்ஷையுடைய நமக்கு நம்முடைய பெருமாள் பக்கலிலே காணலாம் என்றபடி. திருக்கையிலே பிடித்த தி3வ்யாயுத4ங்களும், வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸநபத்3மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே தஞ்சம் என்கை. ஆக நாராயண பத3ார்த்த2த்தை அருளிச்செய்தாராயிற்று.

---

a திருவாய் 1-4-5 b திருவாய் 2-7-2 c திருவாய் 9-3-1
d திருவாய் 9-8-7 e திருவாய் 4-7-1 f திருவாய் 5-9-10



## "சரணௌ" ஶப்3தா3ர்த்த2ம்

'சரணௌ'—என்று, பிராட்டியும் எம்பெருமானும் விடிலும் விடாத a திண்கழலாய் b முழுதும் வந்திறைஞ்சும் c மென் தளிர் போலடியாய் வந்திறைஞ்ச விராதே d 'கமல பாதம் வந்து' என்னும்படி e நீள்கழலாய்ச் f சாடுதைத்தவொண்

---

இனி (சரணௌ) என்கிற பத3த்துக்கு அர்த்த2மருளிச்செய்கிறார் (சரணௌ) என்று தொடங்கி. உபாயத்வத்துக்கேகாந்தமான இதன் கு3ணதி4க்யத்தை அருளிச்செய்கிறார் (பிராட்டியும் எம்பெருமானும்) என்று தொடங்கி. அதாவது — ஸ்ரீமத் பத3த்திலே புருஷகாரபூ4தையாகச் சொன்ன பிராட்டியும், அவள்தானே சிதகுரைக்கிலும் "என்னடியார் அது செய்யார்" என்னும்படி நாராயண பத3த்திற்சொன்ன கு3ணவிஶிஷ்டனான அவனும் கைவிடிலும், திருவடிகள் தன் வைலக்ஷண்யத்தாலே துவக்கிக் கொள்ளுகையாலே கைவிடாது; "வண்புகழ் நாரணன் திண்கழல்" என்கிறபடியே பற்றினாரை நழுவவிடாதே திண்மையையுடைத்தாயிருக்குமென்கை. ஸர்வ ஸமாஶ்ரயணீயத்வத்தைக் கவியன் பாசுரங்கொண்டு நிரூபிக்கிறார் (முழுதும்) என்று. "யத்நபூ2வித்வங்கள் உபாயபூ4தனான அவனுக்கே" என்ற உபாயபூர்த்தியை அருளிச்செய்கிறார் (கமல பாதம் வந்து) என்றுதொடங்கி. ஓடிவந்து தம்மைத்தொடர்ந்தபடியும், அயத்நலப்3த4மானபடியும் சொல்லுகிறது. (வந்து நீள்கழல்) என்று உபாயபூர்த்தியைச் சொல்லுகிறது. நாள்தோறும் ஆஶாலேஶமுடையாரிருந்தவிடத்திலே செல்ல வளரும் திருவடிகளிறே. த்3வீபாந்தரத்தில் சரக்குச்சேரவேண்டினால் பாதிப்பாதி வழியாகிலும் வருதல், ஒருதலைப்பற்றுதல் செய்யவேணுமிறே. அங்ஙனன்றியே, "வந்துனதடியேன் மனம் புகுந்தாய்" என்கிறபடியே வழிவந்தானும் தானே.

---

a திருவாய் 1-2-10 b பெரியதிரு 5-8-5 c பெரியதிரு 7-4-8
d அமலனாதி 1 e திருவாய் (1-9-11), (1-10-1), (5-9-8) f முதல்திருவ 100

மலர்ச் சேவடியாகையாலே, a யாவர்க்கும் வன்சரணாய், b அழும் குழவிக்கும் c பேதைக் குழவிக்கும் தா4ரகமுமாய்,

பற்றினாலும் தானே என்கிறது. உனதடியேன் — வருகிற போது புகுருகைக்கடியாக அவன் கையோடு கொடுவந்த ப்ரமாணம். "நீயோ உன் கார்யத்துக்குக் கடவாய், நான் காண்" என்று தானே ஸர்வப4ரங்களையும் நிர்வஹிப்பானாக வாய்த்து ஏறிட்டுக்கொண்டு புகுந்தது. வந்து புகுரப் புக்கால் இசையாதே "அல்லேன்" என்கைக்கு வாய்த்தலையான நெஞ்சிலே வந்து புகுந்தானாய்த்து. "யானொட்டி என்னுள் இருத்துவம் என்றிலன் தானொட்டி வந்து" என்றாரிறே ஆழ்வார். இசைவு என்னாலே வந்ததாகிலன்றோ விடுகையும் என்னாலே வந்ததாவது. "ஆழ்வீர்! நாம் உம்முடையபாடே இருப்போம்" என்றால், "ஒட்டேன்" என்பரே. ஆகில், இங்கே இருக்கக்கடவோம் என்று ப்ரதிஜ்ஞை பண்ணியாயிற்று வந்திருப்பது. எனக்கு ஜ்ஞாநம் பிறக்கைக்கு க்ருஷிபண்ணி, பிறந்த ஜ்ஞாநம் ப2லிக்குமளவாகக்கொண்டு, நான் "அகன்று போவேன்" என்றால் அவன் ஸம்மதி3க்குமோ? நான் அவனை விட்டாலும் அவன்தான் என்னை விடான் — பத்தி உழவனிறே. இவ்வருகடங்கலும் ப2ல போ4க்தாவான ஈஶ்வரன் க்ருஷி ப2லம் என்றபடி.

த்3விவசநம் இரண்டுக்குமேல் மற்றொன்று புகுர ஸஹியாமையாலே, ஸஹாயாந்தர நிரபேக்ஷமான உபாயபூர்த்தியைச் சொல்லுகிறது. "சரணௌ" என்கிற இடத்திலே "தமேவ ஶரணம் க3ச்ச2" "கழல்களவையே சரணாக" "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்" இத்யாதி3களிற்படியே அவதா4ரணம் விவக்ஷிதம் என்றும் சொல்லுவர். திருவடிகளின் தா4ரகத்வ போ4க்3யத்வங்களை அருளிச்செய்கிறார் (அழுங்குழவி) என்று தொடங்கி. அழுங்குழவி —

a திருவாய் 6-3-7 b பெருமாள்திரு 5-1 c பெரியாழ்திரு 1-2-1



போ4க்3யமுமாய், a 'இணைத்தாமரையடி' என்னும்படி சேர்த்தியழகையுடைத்தான திருவடிகளைச் சொல்லுகிறது.

அவன் 'மாம்' என்று தன்னைப் பற்றச் சொன்னாலும் ஶேஷபூ4தர் b 'கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்'

சேதநன். பேதைக்குழவி — ஈஶ்வரன். தா4ரகத்வ போ4க்3யத்வங்களை "மே தி3வ்யம்" [கீ3தை 4-9] முதலானவிடங்களில் காணலாம். திருவடிகளின் சேர்த்தியழகை அருளிச்செய்கிறார் (இணைத்தாமரை) என்று தொடங்கி. இரண்டு தாமரைப்பூவை நிரைத்துவைத்தாற் போலேயிருக்கிற சேர்த்தியழகைச் சொல்லும் த்3விவசநம் என்றபடி.

இந்த கு3ணநிஷ்4க்யத்தையிட்டு மாத்திரமல்லாமல், இவன் தன் ஸ்வரூபாநுகு3ணமாகவும் திருவடிகளிலே இழிகிறான் என்னுமத்தை அருளிச்செய்கிறார் (அவன் மாம்) என்று தொடங்கி. "ஶேஷிபக்கல் ஶேஷபூ4தன் இழியும் துறை, ப்ரஜை முலையிலே வாய்வைக்குமாப்போலே" என்றருளிச்செய்தாரிறே ஸ்ரீமல்லோகதே3ஶிகன். அதாவது — ஶேஷி பக்கல் ஆஶ்ரயிக்க இழியும் ஶேஷபூ4தன். தன் ஸ்வரூபாநுகு3ணமாக இழியும் துறை திருவடிகள்; ஸ்தநந்த4ய ப்ரஜை தாயினுடைய அவயவமெல்லாங்கிடக்கத் தனக்கு வகுத்ததாயுள்ள முலையிலே வாய்வைக்குமாப்போலே என்கை.

"சித்தாலம்ப3ந ஸௌகர்ய க்ருபோத்தம்ப4கதாதி3பி4:।
உபாயத்வமிஹ ஸ்வாமி பாத3யோரநுஸம்ஹிதம் ॥"

இங்கு தா3ஸபூ4தன் ஔசித்யாதிஶயத்தாலும், "அநதிக்ரமணீயம் ஹி சரணக்3ரஹணம்" என்கிறபடியே க்ருபோத்தம் ப4கத்வாதிஶயத்தாலும், "தவாம்ருதஸ்யந்தி3நி" இத்யாதி3களிற்படியே போ4க்3யத்வாதிஶயத்தாலும் திருவடிகளை

a பெரியதிரு 1-8-3 b திருவாய் 10-5-1

a "எந்தை கழலிணை பணிமின்" b 'ஆயனடியல்லது' c 'நின்னடியன்றி மற்றறியேன்' என்று d கண்ணனைத் தாள் பற்றக் கடவர்களிறே.

e இணைத்தாமரைகட்கு அன்புருகி நிற்கும் அது நிற்கச் f சிலம்படியிலே மண்டுகிறவனுக்கு. g அன்னமென்னடையை அருவருக்கும்படி, h சேவடிக்கே மறவாமையை உண்டாக்கி i அன்புசூட்டப்பண்ணி; j பாதமே சரணாகக் கொடுத்து. k 'கழல் காண்டுங் கொல்' l 'தலைக்கணியாய்' m 'சரணம்

அவலம்பி3க்கிறான். இவ்வர்த்த2ம். "ஸர்வத3ா சரணத்3வந்த்3வம்" "த்வத்பாத3கமலாத3ந்யத்" "மம தே பாத3யோ: ஸ்தி2தம்" "லோகவிக்ராந்தசரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபே4ா" "ஸ ப்4ராதுஸ்சரணௌ க3ாடம்4" "தஸ்ய தாம்ரதலௌ தாத சரணௌ ஸுப்ரதிஷ்டி2தௌ। ஸுஜாதம்ருது3ரக்தாபி4ரங்கு3லீபி4ரலங்க்ருதௌ॥ ப்ரயதேந மயா மூர்த்4நா க்3ருஹீத்வா ஹ்யபி4வந்தி3தௌ॥" "சரணௌ ஶரணம் யாத:" "ப்ரபந்நாகௌ4க4 வித்4வம்ஸி சரணௌ ஶரணம் க3த:" இத்யாதி3களிலும் ப்ரஸித்3த4ம். இவற்றை அடியொற்றினவர்களும் "உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்" என்றும் "த்வத்பாத3மூலம் ஶரணம் ப்ரபத்3யே" என்றும் அருளிச்செய்தார்கள். "ஸௌக3ந்த்4ய ஸௌகுமார்யாதி3கு3ணவிக்3ரஹவாந் ஹரி:। தஸ்ய ஸ்வாத்மப்ரத3ாநே து ஸாத4நம் ஸ்வபத3த்3வயம்॥" என்று அபி4யுக்தரும் ப்ரதிபாதி3த்தார்கள்.

ருசிஜநகத்வாதி3கள் திருவடிகளின் வைப4வங்கள். இதுதன்னை அருளிச்செய்கிறார் (இணைத்தாமரைகட்கு) என்று தொடங்கி. "சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோ

a திருமாலை 9 b பெரியதிரு 1-10-8 c பெரியதிரு 7-7-2, 3, 5, 6
d திருவாய் 3-10-10 e திருவாய் 7-1-10 f பெரியதிரு 1-6-3
g பெரியதிரு 9-7-2 h பெரியதிரு 3-5-4 i திருவிருத்தம் 2 j திருவாய் 5-7-10 k திருவாய் 5-9-3 l திருவாய் 9-2-2 m திருவாய் 5-8-7



தந்தென் சன்மம் களையாய்' என்றிருக்கிற அபேக்ஷைகளையுண்டாக்கி. a 'தாள் கண்டு கொண்டு என்தலைமேல் புனைந்தேன்' b 'காண்டலுமே விண்டேயொழிந்த' என்கிற பேறுகளைக் கொடுத்து. c 'அங்கோர் நிழலில்லை நீருமில்லை' என்கிற விடாயை d அடிநிழல் தடத்தாலேயாற்றி e பாதபோதையுன்னி வழிநடத்தி. f தாளிணைக் கீழ்ப்புகும் காதலுக்கீடாகத் g தாளின் கீழ்ச்சேர்த்து. h வேறே போகவிடாதே. i அடிக்கீழிருத்தி, j திருவடியே சுமந்துழலப்பண்ணி. k அடிக்கீழ் குற்றேவலிலே மூட்டி. ருசி ஜநகத்வம் முதலாக நித்ய கைங்கர்யம் எல்லையாக நடத்துவது திருவடிகளைக் கொண்டிறே.

இத்தால் புருஷகாரமான l பனி(மா)மலராள் வந்திருக்குமிடமாய் m சுடர் வான் கலன் பெய்த மாணிக்கச் செப்புப்

டிசைந்த காலம், மாதரார் கயற்கணென்னும் வலையுள் பட்டழுந்துவேனை. போதரேயென்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பால் ஆதரம் பெருகவைத்த அழகன்' என்றாரிறே ஆழ்வார். "எங்ஙனேயோ"வில் ருசிஜநகத்வத்தையும், "நோற்றநோன்"பில் உபாயத்வத்தையும். "ஆராவமு"தில் உபேயத்வத்தையும் அருளிச்செய்தாரிறே நம்மாழ்வார். "இதுதான்—ஶாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாதே. விஷயாந்தரங்களிலே மண்டி விமுக2ராய்ப் போரும் சேதநர்க்கு வைமுக்2யத்தை மாற்றி ருசியை விளைக்கக்கடவதாய். ருசி பிறந்தால் உபாயமாய். உபாய பரிக்3ரஹம் பண்ணினால் போ4க்3யமுமாயிருக்கும்" என்ற ஸ்ரீ வசநபூ4ஷண ஸூத்ரமும், பிள்ளையுறங்காவில்லிதாஸர் சரிதமும் இங்கே அநுஸந்தே4யம்.

திருவடிகளைச் சொன்ன இது. திருமேனிக்கு உபலக்ஷணம் என்கிறார் (இத்தால்) என்று தொடங்கி. "இத்

a திருவாய் 10-4-3 b திருவாய் 10-4-9 c பெரியாழ்திரு 5-3-4
d திருவாய் 10-1-2 e திருச்சந்த 66 f திருவாய் 3-9-8 g திருவாய் 7-5-10 h திருவாய் 2-9-10 i திருவாய் 5.1-11 j திருவாய் 4-9-9
k திருவாய் 1-4-2 l பெரியதிரு 2-2-9 m பெரியதிரு 7-10-6

போலே ஸ்வரூபகு3ணங்கள் நிழலெழும்படியாய், 'திருமேனி கிடந்ததுவே' என்னும்படி அவையொழியவும் தானே கார்யம் செய்யவற்றாய், சிசுபாலனோடு சிந்தயந்தியோடு வாசியற ஸித்3த4ஸாத்4யரூபமான உபாயங்களால் செய்யும் கார்யத்தையும் தானேசெய்து a 'அலவலைமை தவிர்த்த' b 'காதல் கடல் புரைய விளைவித்த' என்னும்படி அத்3வேஷத்தையும் பரப4க்தியையும் உண்டாக்கித் தன்னோடே சேர்த்துக்கொள்ளும் திருமேனியை நினைக்கிறது.

---

தால் பிராட்டிக்கு இருப்பிடமாய் கு3ணப்ரகாஶகமுமாய், ஶிஶுபாலனையுமகப்படத் திருத்திச் சேர்த்துக்கொள்ளும் திருமேனியை நினைக்கிறது." என்று அருளிச்செய்தாரிறே ஸ்ரீமல்லோகாசார்யனும். அதாவது—"சரணௌ" என்று விக்3ரஹ ஏகதே3ஶமான திருவடிகளைச் சொன்னவித்தால்—"திருவிருந்த மார்வன்" என்னும்படி ஸ்ரீமத்பத3த்திற் சொன்ன புருஷகாரபூ4தையான பிராட்டிக்கு இருப்பிடமாய், நாராயணபத3த்திற் சொன்ன கு3ணங்களுக்கு ப்ரகாஶகமாய், "பல பல நாழம் சொல்லிப் பழித்த சிசுபாலன்" என்கிறபடியே ப்ரத்3வேஷபரனாய், நிந்தோ3க்திகளைப் பண்ணித்திரிந்த ஶிஶுபாலனையும் உட்பட "அலவலைமை தவிர்த்த அழகன்" என்கிறபடியே தன்னழகாலே த்3வேஷாதி3களை போம்படி திருத்தி "திருவடி தாட்பால் அடைந்த" என்கிறபடியே சேர்த்துக்கொள்ளும் ஸ்வபா4வத்தையுடைத்தான தி3வ்யமங்க3ள விக்3ரஹத்தை நினைக்கிறது என்கை. "ஆராத்4ய ரூப ப்ரத3ர்ஶநேந ப4க்த்யுத்பாத3நம் அவதாராஸாதா4ரண ப்ரயோஜநம்| பரஶ்ஶதபருஷவாதீ3 ஜந்மத்ரயஶத்ரு: ஶிஶுபாலோऽபி ஹி க்ருஷ்ணத3ர்ஶநேந ப்ரீதிமாந் பூ4த்வா முக்திம் க3த:||" இத்யாதி3 தாத்பர்யசந்த்3ரிகாவசநம் அத்ராநுஸந்தே4யம். தி3வ்யாத்ம ஸ்வரூபத்திலும் கீழ்ச்சொன்ன கு3ணாதி3களிலும் தெளிவில்லாதார்க்கும், ஶுத்3த4ஸத்வத்3ரவ்யமயமாய், ஸ்வவிஷய ஜ்ஞாநத்தாலே ஜ்ஞாநஸங்கோசத்துக்கு நிவர்த்தகமாய், பர்த்வ ஸௌலப்4ய வ்யஞ்ஜகமான தி3வ்ய மங்க3ள விக்3ரஹமே இலக்காம். இப்ராதா4ந்யத்தைப்பற்ற க3த்3யத்தில் கு3ணங்களுக்கு முன்னே தி3வ்யமங்க3ள விக்3ரஹத்தை அருளிச்செய்தார். தி3வ்யாத்ம ஸ்வரூபத்தில் தெளிவுடையராயிருக்கச் செய்தேயும் "மூர்த்தம் ப்3ரஹ்ம ததோபி தத்ப்ரியதரம் ரூபம் யத3த்யத்3பு4தம்" என்னும்படி ஈஶ்வரன் தனக்கும் போ4க்3யதமமான தி3வ்யவிக்3ரஹாநுப4வத்தில் ஊற்றத்தாலே திருமங்கையாழ்வார் தம்மை ஈஶ்வர விஷயத்தில் தே3ஹாத்மவாதி3களாக அருளிச்செய்வர். ஸர்வேஶ்வரனுடைய தி3வ்யமங்க3ள விக்3ரஹத்துக்கு "பாபம் ஹரதி யத் பும்ஸாம் ஸ்ம்ருதம் ஸங்கல்பநாமயம்| தத் புண்ட3ரீகநயநம் விஷ்ணோர் த்3ரக்ஷ்யாம்யஹம் முக2ம்||" "ரூபௌதா3ர்யகு3ணை: பும்ஸாம் த்3ருஷ்டிசித்தாபஹாரிணம்" இத்யாதி3களிற்படியே ஶுப4த்வமும் ஆஶ்ரயத்வமுமுண்டு. சதுர்முகா2தி3விக்3ரஹந்துக்கு ஆஶ்ரயத்வம் உண்டாகிலும், ஶுப4த்வமில்லை. ப4க3வத் ஸ்வரூபத்துக்கு ஶுப4த்வமுண்டேயாகிலும் ஆஶ்ரயத்வமில்லை. ஆகையால் தி3வ்யமங்க3ள விக்3ரஹத்துக்கே ஶுப4த்வமும் ஆஶ்ரயத்வமும் உள்ளது. "ஸ்வரூபாத் ஸ்வாமிநோ ரூபம் உபாதே3யதமம் விது3:" என்றதாய்த்து.

நாராயண பத3த்திற் சொல்லுகிறபடியே ஈஶ்வரன் கு3ணத்3வாரா உபாய பூ4தனுமோபாதி, விக்3ரஹத்3வாராவும் உபாயபூ4தனுமென்று விக்3ரஹத்தினுடைய ஸ்வதந்த்ரோபாயத்வம் தோற்றுகைக்காகத் தனியே விக்3ரஹத்தை உபாதா3நம் பண்ணுகிறது. ஆகையிறே பா4ஷ்யகாரர் "ஸௌந்த3ர்யாதி3 கு3ணாவிஷ்காரேண அக்ரூரமாலாகாராதீ3ந் பரமபா4க3வதாந் க்ருத்வா" என்றருளிச்செய்தார். 'தெரிவைமார் உருவமே மருவி" என்கிறபடியே இதரவிஷயங்களினுடைய பொறிபுறந்தடவின வடிவிலே அகப்பட்டுப் போருகிற சேதநனுக்கு ஸ்வவிஷயக ருசிஜநகமாயும்,

a பெரியாழ்திரு 4-3-5 b திருவாய் 5-3-4

17-12-90

## ஶரண ஶப்3த3ார்த்த2ம்

(ஶரணம்) என்று திருவடிகளைப் பற்றும்படியைச் சொல்லுகிறது. அவித்3யை முதலாக தாபத்ரயம் முடிவாக

---

உபாயமாயும் உபேயமாயும் ஆகிறது ப4க3வத்3தி3வ்ய மங்க3ள விக்3ரஹம். "ஜிதந்தே புண்ட3ரீகாக்ஷ" என்றும். "சரணத்3வந்த்3வம் வ்ரஜாமி" என்றும். "ந ஜாநே ஶரணம் பரம்" என்றும். "த்வத்பாத3 கமலாத3ந்யத்" என்றும் "பாத3யோஸ் ஸ்தி2தம்" என்றும் விக்3ரஹத்தினுடைய ருசிஜநகத்வத்தையும் உபாயோபேயத்வங்களையுமிறே ஜிதந்தையில் அடைவே ப்ரதிபாதி3க்கிறது. "அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்று ஆழ்வாரும், "ஸ ப்4ராது: சரணௌ கா3ட4ம் நிபீட்3ய" என்று ஆழ்வார்க்கடியான இளையபெருமாளும் திருவடிகளையிறே உபாயமாக அத்4ய வஸித்தது. ப்ராப்யமும் ஸ்வரூபமும் ஸூரிகளோடு ஸமாந மாயிருக்குமாபோலே. ப்ராபகமும் ஸூரிஸமாநமாயிறே யிருப்பது என்றபடி.

அநந்தரம் ஶரணபத3ார்த்த2த்தை அருளிச்செய்கிறார் (ஶரணம்) என்று தொடங்கி. ஶரணம் — உபாயமாக என்றபடி. "உபாயே க்3ருஹரக்ஷித்ரோ: ஶப்3த3: ஶரண மித்யயம்। வர்த்ததே ஸாம்ப்ரதம் சைஷ உபாயார்த்தை2க வாசக:॥" என்கிறபடியே ஶரணஶப்3த3ம் ரக்ஷிதாவுக்கும் க்3ருஹத்துக்கும் உபாயத்துக்கும் வாசகமேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்துக்கே வாசகமாகையாலும். உபாய க்ருத்யம் இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரகரணமாகையாலும், 'இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக' என்று இப்பத2த்துக்கு அர்த்த2ம் என்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (அவித்3யை) என்று தொடங்கி. இஷ்டாநிஷ்டங்கள் இவ்வதி4காரிக்கு எவை என்பதனை அருளிச்செய்கிறார் (அவித்3யை முதலாக) என்று



நடுவுள்ள அநிஷ்டங்களையும் போக்கி a பிணிவளராக்கை நீங்குகை முதலாக b நின்றேயாட்செய்கை முடிவாக நடுவுள்ள இஷ்டங்களையும் தரும் உபாயமாக.

---

தொடங்கி. அநிஷ்டமாவது:— "நீர் நுமது என்றிவை வேர்முதல் மாய்த்து" என்றும். "அநாத்மந்யாத்ம பு3த்3தி4ர்யா" என்றும் சொல்லுகிறபடியே அநாத்மந்யாத்ம பு3த்3தி4ரூபமாயும் அஸ்வே ஸ்வப்ரதிபத்திரூபமாயுமிருக்கிற அவித்3யையும். அவித்3யா கார்யமான ராக3த்3வேஷங்களும், கரணத்ரயத்தாலும் கூடுபூரித்துவைக்கும் தத்கார்யங்களான புண்யபாபரூபகர்மங்களும். கர்மத்3வயத்தினுடைய ப2லபோ4க3ார்த்த2மாகப் பரிக்3ரஹிக்கும் தே3வதிர்யக்3ாதி3யான நாநாவித4ஶரீரங்களும், அஶ்ஶரீரங்களைப் பரிக்3ரஹித்து அநுப4விக்கும் ஆத்4யாத்மிகாதி3 து3:க்க2பரம்பரைகளும் தொடக்கமானவை. இஷ்டமாகிறது:— புண்யபாபகர்ம வி்தூ4நநப்ரகாரமும், ஹார்த்த3மார்க்க3விஶேஷப்ரகாஶமும், ஹ்ருத3யகு3ஹாநிர்க3மநமும். அர்ச்சிர்வாஸரோத்தராயண ஶுக்லபக்ஷாத்3யாதிவாஹிக ஸத்காரமும். ஸலிலத3ஹந பவநாத்3யாவரணஸப்தகாதிலங்க4நமும், த்ரிகு3ணாதிக்ரமணமும். விரஜாக்2ய அப்ராக்ருத நதீ3விஶேஷாவக3ாஹநமும். ஸூக்ஷ்ம ஶரீரவிமோசநமும். அமாநவகரஸ்பர்ஶமும். அபஹதபாப்மத்வாதி3கு3ணக3ண தத3ாஶ்ரய ஸ்வரூபப்ரகாஶமும், பஞ்சோபநிஷந்மயமான தி3வ்யவிக்3ரஹபரிக்3ரஹமும். ஐரம்மதீ3ய தி3வ்யஸர:ப்ராப்தியும். தி3வ்யாப்ஸரஸ்ஸங்க4 ஸத்காரமும், ப்3ரஹ்மாலங்காராலங்கரணமும், ப்3ரஹ்ம க3ந்த4ரஸதேஜ: ப்ரவேஶமும், தி3வ்யகோ3புரப்ராப்தியும். ஸூரிஸங்க4ஸத்காரமும், ராஜமார்க்க3க3மநமும், ப்3ரஹ்ம வேஶ்மப்ரவேஶமும், தி3வ்யமண்ட3ப ப்ராப்தியும், தி3வ்ய பர்யங்கநிரீக்ஷணமும். ஸபத்நீக ஸர்வேஶ்வரத3ர்ஶநமும், ஆநந்த3மயபரமாத்மஸமீப ஸ்தி2தியும். பாத3பீட2பர்யங்

---

a பெரியதிருமொழி 9-8-3 b திருவாய் 8-3-8

'சரணௌ ஶரணம்' என்று—உ 'மருந்தும் பொருளும் அமுதமும் தானே' என்கிறபடியே அம்ருதமே ஔஷத$_4$மாமாப்

---

கோத்ஸங்க$_3$ரோஹணமும், ஆலோக ஆலாப ஆலிங்க$_3$நாத்$_3$யநுப$_4$வமும். ஸ்வரூபகு$_3$ணவிக்$_3$ரஹாத்$_3$யநுப$_4$வ ஜநித ப்ரீதிப்ரகர்ஷமும். நாநாவித$_4$விக்$_3$ரஹபரிக்$_3$ரஹ பூர்வக ஸர்வதே$_3$ஶ ஸர்வகால ஸர்வாவஸ்த்தோ$_2$சித ஸர்வப்ரகார கைங்கர்யகரணமும்.

கீழ் நிர்தே$_3$ஶித்த வஸ்துவை உபாயமாகச் சொன்ன தன் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் (சரணௌ ஶரணம்) என்று தொடங்கி. இத்தால் ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது. இங்கு உபாயத்வமாவது ப$_2$ல கரணத்வரூபம் என்றபடி. ரக்ஷகத்வமிறே ப$_2$லப்ரத$_3$த்வம். உபாயத்வ ப$_2$லப்ரத$_3$த்வங்களை "சரணமாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம் மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்று நம்மாழ்வாரும். "அகிஞ்சந: அநந்யக$_3$தி:" என்று ஆளவந்தாரும் பிரிய அருளிச்செய்தார்களிறே. "ஸாது$_3$ஷ்கரேண ஶோசேத்$_3$ய: யேந யேந இஷ்டஹேதுநா । ஸ ஸ தஸ்யாஹமேவேதி சரம ஶ்லோக ஸங்க்$_3$ரஹ: ॥" [தாத்-சங் 18-66] என்று தே$_3$ஶிகனும் ப$_4$க$_3$வானுக்குப் ப$_2$லகரணத்வத்தை அருளிச்செய்தாரிறே. பராதி$_4$கரணத்தில் உபாயத்வத்தையும், ப$_2$லாதி$_4$கரணத்தில் ப$_2$லப்ரத$_3$த்வரூபரக்ஷகத்வத்தையும் ஸ்ரீ வேத$_3$வ்யாஸரும் பிரித்து அருளிச்செய்தாரிறே. ரக்ஷணகர்த்தாவுக்குப் ப$_2$ல கரணத்வம் கொள்ளில் கர்த்ருத்வ கரணத்வங்களுக்கு ஏகத்ர ஸமாவேஶம் என்ற விரோத$_4$ம் ப்ரஸங்கி$_3$க்கும் என்ன வேண்டா. சேதநாசேதநவிஶிஷ்டன் உபாதா$_3$நமென்றும் ஜ்ஞாநவிஶிஷ்டன் நிமித்தபூ$_4$தன் என்றும் ஏகாஶ்ரயத்திலே உபாதா$_3$நத்வ நிமித்தத்வங்களை அவச்சே$_2$த$_3$கபே$_4$தா$_3$த்தாலே கொண்டாப்போலே, ரக்ஷகனுக்கே தி$_3$வ்யவிக்$_3$ரஹவிஶிஷ்டத்வவேஷேண உபாயத்வம் அவிருத்$_3$த$_4$மிறே. அதேபோல

---

உ மூன் திருவ 4



போலே உ அங்கண்மாஞாலத்தமுதமாய், அம்ருதத்துக்கு ஊற்றுவாயான அடியிணையை அம்ருதஸஞ்ஜீவிநியாகக் கல்லும் கரிக்கொள்ளியும் பெண்ணும் ஆணுமாம்படி விரோதி$_4$யைப் போக்குமென்கிறது.

---

ஏகத்ர ப்ராப்யத்வ ப்ராபகத்வங்கள் கூடுமிறே. ப்ரஸாத$_3$விஶிஷ்டன் உபாயம் என்றும், ப்ரீதிவிஶிஷ்டன் உபேயம் என்றும் விஶேஷணபே$_4$த$_3$ம் கிடக்கச்செய்தே விஶிஷ்டைக்யத்தாலே எம்பெருமானே உபாயோபேயபூ$_4$தன் என்கிறதாகையாலே எல்லாம் கூடுமிறே. க்ஷீரம் பத்$_2$யமுமாய் போ$_4$க்$_3$யமுமாயிருக்கிறாப்போலே "நிர்வாணம் பே$_4$ஷஜம்" "அம்ருதம் ஸாத$_4$நம் ஸாத்$_4$யம்" "மருந்தும் பொருளும் அமுதமும் தானே" இத்யாதி$_3$களிற் சொல்லுகிறபடியே ப்ராப்யப்ராபகங்கள் ஏகமாயிறேயிருப்பது என்றபடி. கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே. ஸமஸ்தபத$_3$மான பூர்வபத$_3$த்திற்சொன்ன லக்ஷ்மீவிஶிஷ்டத்வமும், கல்யாண கு$_3$ணயோக$_3$மும், தி$_3$வ்யமங்க$_3$ளவிக்$_3$ரஹோபேதத்வமும் ஆகிற மூன்றும், "ஶ்ரியா ஸார்த்த$_4$ம் ஆஸ்தே" "ஸர்வாந் காமாந் அஶ்நுதே" "ஸதா$_3$ பஶ்யந்தி" என்று இவனுக்கு அநுப$_4$வ விஷயமாகச் சொல்லப்படுகிறவையாகையாலே ப்ராப்யமிறே என்கை. இவன் * செயலறுதியாலே உபாயமாக்குகிறானித்தனை. அகிஞ்சநனாய் அநந்யக$_3$தியாய் இருக்கிற இவன் தன் § செயல்மாட்சியாலே, போ$_4$க்$_3$யமான பாலை மருந்தாக்குவாரைப்போலே ப்ராப்யமானதுதன்னையே ப்ராபகமாக்குகிறானித்தனை என்கை.

(கல்லும்) இத்யாதி$_3$—கரிக்கொள்ளியாகக் கிடந்தவன் பரீக்ஷித்து. கல்லாகக் கிடந்தவள் அஹல்யை என்றவிபா$_4$க$_3$ம் கண்டு கொள்வது. அஹல்யையின் ஶிலாத்வம் விலக்ஷணத்வாதி$_4$கரண பா$_4$ஷ்யத்தில் ஸ்ரீபா$_4$ஷ்யகாரராலே உக்தமிறே.

---

உ இர·திருவ 84 * செயலறுதி—செயலற்ற நிலை.

§ செயல்மாட்சி—செயல் மாண்ட நிலை.

இத்தால் [a] 'பொற்றாமரை' [b] 'அடித்தாமரை' [c] 'தாமரை யன்ன பொன்னாரடி' என்கிறபடியே ப்ராப்யமே ஸாத4நமென்று உபாயாந்தரங்களில் வ்யாவ்ருத்தியைத் தெரிவிக்கிறது.

### "ப்ரபத்3யே" ஶப்3த3ார்த்த2ம்

'ப்ரபத்3யே' என்று—அணையையுடைத்து ஆன ஆற்றுக் கால்போலே உபாயமான [d] மதுரவாற்றுக்கால் பே4ாக3த்தை விளைக்கைக்கு உறுப்பான சேதனனுடைய விலக்காமையைத் தெரிவிக்கிறது.

---

"சரணௌ ஶரணம்" என்று ப்ராப்யவஸ்துதன்னையே ப்ராபகமாகச் சொல்லுகையாலே, ப்ராப்யம் வேறும், தான் வேறுமாயிருக்கும் உபாயாந்தரங்களிற்காட்டில் வ்யாவ்ருத்த மான உபாயம் இது என்னுமிடத்தை அருளிச்செய்கிறார் (இத்தால்) என்று தொடங்கி.

அநந்தரம் க்ரியாபத3த்துக்கு அர்த்த2மருளிச்செய்கிறார் (ப்ரபத்3யே) என்று தொடங்கி. ஸேதுப4ங்க3ஸ்ரோத: ப்ரஸ்ருதி ந்யாயத்தை அருளிச்செய்கிறார் (அணை) என்று தொடங்கி. "ப2லத்துக்கு வேண்டுவது ஆத்மஜ்ஞாநமும் அப்ரதிஷேத4முமே" என்கிற ஸ்ரீவசநபூ4ஷண ஸூத்ரத்தை அடியொற்றி அருளிச்செய்கிறார் (விலக்காமை) என்று. இங்கே "பருப்பதத்துக்கயல்பொறித்த பாண்டியர் குலபதி போல் திருப்பொலிந்த சேவடி என் சென்னியின்மேல் பொறித்தாய்" (பெரியாழ் 5-4-7) என்ற பாசுரத்தையும் அதன் வ்யாக்2யாந விஶேஷத்தையும் அநுஸந்தி4ப்பது.

ப்ரபத்திதான், உபாயஶரீரத்தில் அந்வயியாதே உபாய ஸ்வீகாராத்மகமாகையாலே உபேயஶரீரத்திலும் அந்வயி யாதே அதி4காரிக்கு விஶேஷணமாய், மஹாவிஸ்வாஸாத்மக மான ப்ரதிபத்தி விஶேஷமிறே. இது ஸ்வரூபவிரோதி4

---

[a] திருப்பாவை 29 [b] மூன் திருவ 96 [c] பெரியதிரு 7-3-5 [d] திருமாலை 36



இவன் நெஞ்சாலே துணிந்தாலிறே உபாயந்தான் கார்யம் செய்வது. வ்யஸநங்கள் வருதல், பேறு தாழ்த்தல், ஈஶ்வரன் ஶோதி4த்தல் செய்தாலும், துணிந்த சிந்தை குலையாமல் [a] 'சரணல்லாமல் சரணில்லை' என்றிருக்கிலிறே பேறுள்ளது.

---

து3ஷ்கரத்வாதி3தோ3ஷ ரஹிதமானதேயாயினும், வஸ்துத: உபாயத்வம் தனக்கின்றிக்கேயிருக்கச்செய்தே ஆபாத ப்ரதீதியிலே உபாயப்ரதிபத்த்யர்ஹமாயிருக்கும். ஸித்3தோ4 பாய வரணரூபமாய் நிவ்ருத்தி ஸாத்4யரூபமாய், அதி4காரி விஶேஷணமாய், ஸ்வரூபாநதிரேகியாயிருக்கிற இந்த ப்ரபத்தி — ஸித்3த4ஸாத்4யோபாய வ்யாவ்ருத்தவேஷையா யிருக்குமாகையால் இதற்கு உபாயத்வம் அஸம்ப4ாவிதம் என்றபடி. சரமபத3த்தில் சொல்லுகிற ப2லத்துக்கு, ப்ரத2மபத3த்திற் சொல்லுகிற ஆத்மஜ்ஞாநமும் மத்4யம பத3த்திற் சொல்லுகிற அப்ரதிஷேத4முமிறே வேண்டுவது என்றதாய்த்து.

இத்தால், "விலக்காமையே வேண்டுவதென்னில் அது அநுபபந்நம். ஸுஷுப்த்யாத்3யவஸ்தை2களிலே எல்லார்க்கும் மோக்ஷம் கொடுக்கப் ப்ரஸங்கி3க்கும்" என்கிற ஶங்கைக்குப் பரிஹாரம் கூறப்பட்டதாம். அதி4காரமாக அபேக்ஷிதமான ஆத்மஜ்ஞாநம் ஸுஷுப்த்யாதி3களில் இல்லாமையால் ஸர்வமுக்திப்ரஸங்க3மில்லை என்றபடி.

உபாயத்தில் துணிவை அருளிச்செய்கிறார் (இவன் நெஞ்சு) என்று தொடங்கி. "தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு இன்பக்கதி செய்யும் தெளிவுற்ற கண்ணன்" என்றருளிச்செய்தாரிறே ஆழ்வார். "ப்ராப்யப்ராபகங்களிரண்டும் அவனே" என்று அத்4யவஸித்து, பின்னை நாட்டார் செயல்கள் கண்டாதல், யுக்த்யாப4ாஸங்கள் கண்டாதல் பிறகாலியாதே நிற்கை என்றபடி.

---

[a] பெருமாள்திரு 5-1

a 'மனமதொன்றித்துணிவினால் வாழ்' என்கிறபடியே இந் நினைவு நெஞ்சாலேயமையுமேயாகிலும் b 'உன்தன் சரணமே சரணமென்றிருந்தேன்' c 'திருவடியே துணையல்லால் துணையிலேன் சொல்லுகின்றேன்' d 'அடியிணை பணிவன்' என்று மூன்றும் நடவாநின்றதிறே. உபாயஸ்வரூபம் புருஷகார குண விக்ரஹங்களோடே கூடிப் பூர்ணமாகிருப்போலே e சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் ஸ்வீகாரமுண்டானால் அதிகாரி(ர)பூர்த்தியுண்டாகக் கடவது.

ஸ்வஸ்வரூபஜ்ஞானமும், ப்ராப்யருசியும், உபாயாந்தர நிவ்ருத்தியும் பிறந்தாரடைய f உலகமளந்த பொன்னடிக்கு ஆளாகையாலே பற்றும் அதிகாரியைக் காட்டிற்றில்லை.

---

*இதுதன்னுடைய காயிகத்வாதிகளை அருளிச்செய்கிறார் (மனமது) என்று தொடங்கி. இந்த ஸ்வீகாரம் த்ரிவிதகரணத்தாலும் உண்டானால் அதிகாரி(ர)பூர்த்தியென்கிறது. இப்ரபதநம் கரணத்ரயத்தாலும் உண்டாகவுமாம்; ஏககரணத்தாலே உண்டாகவுமாம். பலஸித்திக்குக் குறையில்லை. அதிகாரபூர்த்திக்குக் கரணத்ரயமும் வேணும். பலஸித்திக்கு ஏககரணமே அமையும். உபாயபூர்த்திக்கு ஸ்ரிய:பதித்வமும், வாத்ஸல்யாதிகுணயோகமும், திவ்ய மங்கள விக்ரஹமும் அபேக்ஷிதமாயிருக்கிறாப்போலே. அதிகாரபூர்த்திக்குக் கரணத்ரயமும் அபேக்ஷிதமாயிருக்கும் என்றபடி.*

*இதில் "ஈத்ருஶனை நான் அத்யவஸிக்கிறேன்" என்று ஜாதி குண வ்ருத்தாதிகளாலே ஒருவனை விஶேஷியாமையாலே, இப்ரபத்த்யநுஷ்டாநம் ஸர்வாதிகாரம் என்று தோற்றுகிறது. இதுதன்னை அருளிச்செய்கிறார் (ஸ்வஸ்வரூபஜ்ஞானமும்) என்று தொடங்கி. இப்பதத்திலே*

---

a திருமாலை 21 b பெரியதிரு 1-6-9 c பெரியதிரு 7-4-6 d திருவெழுகூற்றிருக்கை e திருவாய் 6-5-11 f பெரியதிரு 5-8-9



பற்றுகிறேன் என்கிற லட்டு (லட்)—a 'வாணாள் சென்னாள் எந்நாள் அந்நாள்' என்று ஶரீராவஸாநத்தளவும் உபாயாந்தரங்கள் கலசாமைக்கும் b நாள்கடலைக் கழிக்கைக்கும் c 'சோம்பரையுகத்தி' என்கிற உகப்புக்கும் d நிரந்தரம் நினைக்கையாகிற பேற்றுக்குமாக e நாடொறும் ஏக சிந்தையனாய்ச் செல்லுமிடத்தை வெளியிடுகிறது.

---

*"அத்யவஸிக்கிறேன்" என்று அத்யவஸாயாத்மக ஜ்ஞாந விஶேஷத்துக்கு ஆஶ்ரயமான அதிகாரிஸ்வரூபமும் அநுஸந்தேயம். அதாவது திருமந்த்ரத்தில் பதத்ரயத்திலும் சொன்ன ஆகாரத்ரயமும் அநுஸந்தேயம் என்றபடி.*

*'ஸக்ருதேவ ஹி ஶாஸ்த்ரார்த்த: க்ருதோऽயம் தாரயேந்நரம்" "ஸக்ருதேவ ப்ரபந்நாய" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே ப்ரபத்தி ஸக்ருத்கரணீயையாயிருக்க, வர்த்தமாநமாகச் சொல்லுகிறது ஏதுக்காக என்ன அருளிச்செய்கிறார் (பற்றுகிறேன் என்கிற லட்டு) என்று தொடங்கி. அதாவது "லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபோ" "நின்னடியிணை அடைந்தேன்" "அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்" என்கிறபடியே சொல்லாதே, "ப்ரபத்யே" என்று வர்த்தமானமாகச் சொல்லுகிறது. ப்ரக்ருதியோடேயிருக்கிற இவன் ரஜஸ்தமஸ்ஸுக்களாலே கலங்கி உபாயாபாயங்களில் ஏதேனும் ஒன்றிலே அந்வயித்து, பின்னை ஸத்வம் தலையெடுத்து அநுதாபம் பிறந்து பயப்பட்ட காலத்திலே "ப்ராயஶ்சித்திரியம் ஸாத்ர யத்புநஶ் ஶரணம் வ்ரஜேத்" என்கிறபடியே ப்ரபத்தியொழிய அதுக்குப் பரிஹாரம் இல்லாமையாலும், அதுதான் ஸக்ருத்க்ருதமானபின்பு புந: கரணம் ஆகாமையாலும், பூர்வப்ரபதநத்தை அநுஸந்திக்கைக்காகச் சொழுந்து படக்கிடக்கிறது என்கை. உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும் காலக்ஷேபத்*

---

a திருவாய் 5-8-3 b திருவாய் 1-6-7 c திருமாலை 38 d திருச்சந்த101 e திருவாய் 5-10-11

துக்கும் இனிமையாலே விடவொண்ணாமையாலும் நடக்கும். பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும். அதாவது பேற்றுக்கு உறுப்பாகப் பலகாலும் அநுஸந்தி4க்க வேணுமென்று ப்ரதிபத்தி பண்ணில், ஸஹாயாந்தர ஸம்ஸர்க3ாஸஹமான ஸித்3தோ4பாயம் சணற்கயிறு கண்ட ப்3ரஹ்மாஸ்த்ரம் போலே தன்னைக் கொண்டு நழுவும் என்கை. இங்கே "சரணாகதி மற்றோர் சாதநத்தைப்பற்றில் அரணாகாது, அஞ்சனை தன் சேயை—முரணழியக்கட்டியது வேறோர் கயிறு கொண்டார்ப்பதன் முன். விட்ட படை போல விடும்" என்ற ஞானஸாரப்பாசுரமும். "ராக்ஷஸாநாம் அவிஸ்ரம்ப4ாத் ஆஞ்ஜநேயஸ்ய ப3ந்த4நே। யதா2 விக3லிதா ஸத்3ய: த்வமோக4ாऽப்யஸ்த்ர ப3ந்த4நா || ததா2 பும்ஸாமவிஸ்ரம்ப4ாத் ப்ரபத்தி: ப்ரச்யுதா ப4வேத் ||" என்ற ஸநத்குமார ஸம்ஹிதா வசநமும் அநுஸந்தே4யம். "ப்ராய: ப்ரபத்3நே பும்ஸாம் பௌந:புந்யம் நிவாரயந்। ஹஸ்த: ஸ்ரீரங்க3ப4ர்த்துர்மாம் அவ்யாத3ப4யமுத்3ரித: ||" என்று ந்யாஸ திலகத்திலே தே3ஶிகனும் அருளிச்செய்தாரிறே. நமஸ்காரமும் காயிகப்ரபத்தியிறே. "த்3வயமர்த்தா2நுஸந்தா4நேந ஸஹ ஸதை3வம் வக்தா யாவச்ச2ரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே3 ஸுக2மாஸ்வ" என்று ஶரண்யன்தானே அருளிச்செய்கையாலும். ஶ்ரிய:பதித்வாதி3விஶிஷ்டவிஷயமாகையாலே "ஸுஸுக2ம் கர்த்தும் அவ்யயம்" என்று ஸாத4நத3ஶையிலும் இனியதாயிருக்கையாலும் "அவனே உபாயம்" என்கிற நினைவு மாறாதே செல்லக்கடவதென்றதாயிற்று. ஆனால் "நிதி3த்4யாஸிதவ்ய:" என்று அஸக்ருதா3வ்ருத்திரூபமான உபாஸநாத்மகஜ்ஞாநத்திற்காட்டில் இதுக்கு வாசியேதென்னில்: அங்கு அநுஸந்தா4ந விச்சே2த3த்தில் ப2ல விச்சே2த3ம் பிறக்கையாலே விதி4யாயிருக்கும். இங்கு அப்படி வருவதொரு ஸங்கடமில்லாமையாலும், ஸ்மர்த்தவ்ய விஷயஸாரஸ்யத்தாலும் ராக3ப்ராப்தமாயிருக்கும். பண ப3ந்த4த்3யூகத்துக்கும் லீலாத்3யூதத்துக்கும் உள்ள வாசி, ப4க்தி ப்ரபத்திகளுக்குண்டிறே. "மந்திரத்தை மந்திரத்தால்



மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம்" என்றாரிறே திருமங்கையாழ்வார். இப்போது மறதியாவது — புந: ஈஶ்வரனை உபாயமாக அநுஸந்தி4ப்பதொரு அநுஸந்தா4நம். ஆகையால் பூர்வார்த்த4த்திலே இழியாதே அநுப4விக்கப்பார் என்கிறார். அடியிலே ஈஶ்வரன் கையிலே நம் கார்யத்தை ஸமர்ப்பித்துவிட்டோமாகில், இனி ஸ்வோஜ்ஜீவநத்தைச் சிந்திக்கையாவது பிறர் கார்யத்திலிழிகையிறே. ஸ்வரக்ஷணத்தோடு ஜக3த்3வ்யாபாரத்தோடு வாசியில்லையிறே ப்ராப்தியில்லாமைக்கு. ஆகையால் ப2லஸித்3தி4க்கு ஸக்ருத்கரணமமையும். காலக்ஷேபாதி3களுக்கு அஸக்ருத்கரணம் அபேக்ஷிதமாய் இருக்கும் என்றதாய்த்து. அன்றிக்கே, "யாவச்ச2ரீரபாதம் அநுஷ்டி2யாநின்றாலும் பெறுகிற ப2லத்தின் கனத்தைப்பார்த்தால் 'ஸக்ருத்' என்கைக்கும் போராதபடிகாண் இருப்பது" என்று எம்பார் அருளிச்செய்வர். அங்ஙனன்றியிலே, ஸஹஸாஶப்3த3த்துக்கு ஸக்ருத3ாதே3ஶமாய், "ஸக்ருதே3வ ப்ரபந்நாய" என்கிறது. "ஸஹஸைவ ப்ரபந்நாய" என்கிறபடி என்று ஆழ்வான் பணிக்கும். அதாகிறது – ஸம்ஸாரத்தில் ப4யாதிஶயத்தாலும் ப4க3வத்3 விஷயத்தில் ருச்யதிஶயத்தாலும் "ஆஜகா3ம முஹூர்த்தேந" என்று சொல்லுகிறபடியே ஸத்வரனாய்க்கொண்டு ஆஶ்ரயிக்கை. ஆகவித்தால் இழிகிறவன் நேரே அகிஞ்சநாதி4காரியாகையாலும், எதிரி நேரே ஸர்வஸமாஶ்ரயணீய விஷயமாகையாலும் ப2லாவ்யபி4சாரியான உபாயாத்4யவஸாயத்தை ஸ்வாநுஷ்டா2நமாக்கிற்றாய் நின்றது.

ஆக, பூர்வார்த்த4த்தாலே — அத்4யவஸாயாத்மக ஜ்ஞாந விஶேஷத்தையும் அதுக்கு உபேயாத்4யவஸாயத்திற்காட்டில் வ்யாவ்ருத்தியையும், அந்த உபாயத்துக்கு ஸாத்4யோபாய வ்யாவ்ருத்தியையும், அந்த ஸித்3தோ4பாயத்தில் இழிகைக்கு விரோதி4யான பூர்வாபராத4 ப4யத்துக்கு

